

M. CHINNIAH CHETTIAR.

BORN 1883.

# முன்னுரை.

நமது சமூகத்திற் புருஷர்களைப் போற் பெண்களும் மறுமணம் (Remarriage) செய்துகொள்ளும் உரிமையைப் பெறுதல் எவ்வளவு அவசியமானதாகவும் வேண்டற்பாலதாகவும் பல துன்பங்களையும் பணத் தேவையையும் வீண் செலவையும் போக்குவதாகவும் இருக்கிற தென்பதை அனுபவபூர்வமாக இச்சிறு நூலில் எடுத்து விவகரித்து எழுதியிருக்கிறேன்.

இருபது வருஷங்கட்கு முன் எனது இளம்பிராயத்தில் நமது சமூக சீர்திருத்த விஷயமாக நான் கூட்டங்களிற் பேசியவற்றையும் பத்திரிகைகளில் எழுதியவற்றையும் திரட்டி "வியாசங்களும் உபந்நியாசங்களும்" (Essays and Lectures) என்னும் ஒரு புத்தகமாக்கி காலஞ்சென்ற நீதிபதி ஸர். சுப்பிரமணிய அய்யரவர்கள் (ராஜா ஸர்.) ஸ்ரீமான் அண்ணாமலை செட்டியாரவர்கள் முதலிய பிரபலஸ்தர்களின் மதிப்புரையோடு வெளியிட்டபோது நான் கனவு காண்பதுபோல் எதிர்பார்த்த பல சீர்திருத்தங்களில் ஒன்று (விவாஹ விஷயம்) தவிர மற்றெல்லாம் ஒருவாறு கைகூடி விட்டன வென்றே சொல்லவேண்டும். அவை கைகூடியதிலிருந்து என் மனப்போக்கில் எனக்குள்ள நம்பிக்கை உறுதிப்பட்டு இப்போது பெண்கள் மறுமண விஷயத்தை வற்புறுத்தவும் தூண்டுதலாயிற்று. அக்காலத்தில் (இருபது இருபத்தைந்து வருஷங்கட்கு முன்) சமூக சம்பந்தமான

குறைபாடுகளை யெடுத்துக்காட்டி ஒரு கூட்டத்திற் பேசுவதும் பத்திரிகைகளில் எழுதுவதும் பெருங் குற்றமாகவும் அக்கிரமச் செயலெனவும் கருதி தூஷிப்பதும் திட்டுவதும் அதற்காக வட்டகைக் கூட்டம் பத்தூர்க் கூட்டம் கூடி என்னென்னவோ செய்யப்போவதாக ஆர்ப்பாட்டஞ் செய்வதும் சிலருக்கு சகஜமாக இருந்தன. ஆயினும் சமூகாபிமானத்தால் நன்மையே கூறுவதாக ஒரு திடமான அபிப்பிராயம் எனக் கிருந்தமையால் சீர்திருத்தத்தில் எனக்குள்ள நம்பிக்கையும் உறுதியும் சிறிதும் குறைந்த தில்லை. பிறகு நாளாகவாகப் பல இளைஞர்களும் சில முதியோரும் சிரத்தை யுடையவர்களாய் சீர்திருத்தங்களைப் பகிரங்கமாக ஆதரிக்க முற்பட்டனர். பல அறிஞர்களாற் பலவிதமாகவும் பிரசாரங்கள் செய்யப்பட்டன. சமூக சீர்திருத்தப் பத்திரிகைகள் தோன்றி நல்ல ஊழியஞ் செய்தன. அவற்றின் பயனாக இப்போது சமூக சீர்திருத்தம் எல்லோருக்கும் அவசியமான ஒரு சிறந்த காரியமாகக் கருதப்படுகிறது.

ஆயினும் அவற்றுள் முக்கியமானதும் சமூக நன்மைகட்கு ஜீவதாதுபோல் இருப்பதுமான விவாஹ விஷயம் கொஞ்சமும் திருத்தமுடியாத மாதிரியில் இன்னுமிருக்கிற தென்பதையும் அதன் பளு (Weight) சமூகம் தாங்கமுடியாததாக இருக்கிற தென்பதையும் அறிஞர் ஒப்புக் கொள்ளுவர். அதற்கு முக்கியமான காரணம் நமது பெண் மக்கள் ஒரு சிறிதும் கல்வியறிவும் உலக அறிவும்பெறாது மிகவும் சாமான்ய ஜனங்களாக இருந்து

விட்டதே யாகும். அதிர்ஷ்டவசமாக இப்போதையப் பெண்களெல்லாம் உயர்தரக் கல்விகற்று வருகின்றனர்.

நம்முட் கட்டுப்பாடாக வேண்டிய சீர்திருத்தங் களைச் செய்து கொள்ளுவதற்கு அனுகூலமான பல வச திகளும் நமக்கிருப்பது போல் தென்னிந்தியாவில் வேறு எந்த சமூகத்துக்கு மில்லை யென்று உறுதியாகச் சொல் லலாம். நாம் ஒரே ஜாதி, ஒரே மதம், ஒரே பாஷை, ஒரே விதமான நடையுடை, ஒரேவிதமான பழக்க வழக் கங்களை யுடையவர்களாக இருப்பதோடு அடுத்தடுத்து வசிப்பவர்களாகவும் நெருங்கின சம்பந்தமுடையவர்களா கவும் ஒரு குடும்பத்து மக்களைப்போ. லிருக்கிறோம். அப்படியிருந்தும் விவாஹ சம்பந்தமான காரியங்கள் ஒரு வழிப்படாமலும் திருத்தமடையாமலும் செட்டில்லாம லும் மனம் போனபடி தாறுமாறாக நடைபெறுவதும் அனுஜிதமான முறையில் நடைபெறுவதும் பெரிதும் வருந்தற்பாலது.

அந்தக் கஷ்டங்களை யெல்லாம் போக்குவதற்கும் பழுவைக் குறைப்பதற்கும் பெண்களின் நிலைமையைப் பெருமைப்படுத்துவதற்கும் சமூகம் சிதறாமற் காப்பதற் கும் மாதர் மறுமணத்தை சமூகம் எற்றுக்கொள்ளுவ தைத் தவிர வேறு சிறந்த வழியே யில்லை யென்பது எனது திடமான அபிப்பிராயம். இந்த அபிப்பிராயமும் கொள்கையும் இப்போதும் பலருக்கு வெறுப்பையும் மன வருத்தத்தையும் உண்டாக்குவனவாக இருக்கக்கூடு மென்பதை நான் நன்கறிவே னாயினும், காலாந்திரத்தில்

சகஜமாகவும் நிச்சயமாகவும் இது நடைபெறப்போகும் காரிய மென்பதை மட்டும் அவர்கட்குத் துணிந்து கூற விரும்புகிறேன்.

சமூகாபிமானிகள் இப் புத்தகத்தின் பெயரைப் பார்த்தமாத்திரத்தில் பழக்க வழக்கத்துக்கு விரோத மான விஷயமென்று ஆத்திரப்பட்டு விடாமல் முழுதும் படித்துப் பார்த்து சீர்தூக்கி ஆராய்ந்து பாரபக்ஷமில் லாத முடிவுக்கு வருவார்களென்று நம்புகிறேன்.

மகிபாலன்பட்டி<br>25—4—33.

M. சின்னையா செட்டியார்.

# மாதர்ம நூமணம்.

**நமது** சமூகம் விவாஹ விஷயத்தில் காலதேச வர்த்தமானங்களை யனுசரித்து நேரான பாதையிற் செல்லாமற் பல கரடுமுரடான பாதைகளில் நடந்து இப்போது அண்டுவதற்கும் ஒண்டுவதற்கும் நிழலில்லாத பாலைவனத்தில் வந்து நிற்கின்றது. இன்னும் பல மலைகளும் மடுக்களும் காறாறுகளும் எதிரில் இருக்கின்றன. அவற்றைக் கடப்பதற்குரிய சாதனங்கள் ஒன்றும் கைவசமில்லை. பக்கத்தேயுள்ள ஒரு சிறு வேலியை (பழைய வழக்கம்) த்தாண்டி, நவீன முறையில், இயந்திரங்களின் உதவியால் மிகவும் அழகாகவும் ஒழுங்காகவும் செய்யப்பெற்றிருப்பதும் பாலைவனம், மலை, மடு, ஆறு இவற்றைக் கடப்பதற்குரிய சாதனங்கள் அமைந்திருப்பதும் தாகவிடாய், பசி, அயர்வு, சோர்வில்லாமல் வழிகொள்ளக் கூடியதும், தங்கு மிடங்களுள்ளதும், திருடர் பயமற்றதுமான நல்ல பாதை (Main Road) யைவிட்டு ஏன் சிரமப்படவேண்டும்? உடற் பயிற்சி பெற்ற திடசரீரிகள் (பெருந்தனவந்தர்) சிலர் நாளைவரும் தளர்ச்சியை நினையாமல் பாதையற்ற பாதையிற் சென்றால் அவர்களை எல்லோரும் பின்பற்றவேண்டுமோ? ஒரு பெரிய சமூகத்தில் மூத்தோர், இளையோர், நோயுற்றோர், அங்கவீனர், பேதையர் பலரும் கலந்திருப்பது சகஜமன்றோ! அவர்களெல்லோரும் தங்கு தடையில்லாமல் இந்தப் பாழான பாதையில் திடசரீரிகளைப் பின்பற்ற முடியுமா? அவர்களைப் பின்பற்றி ஓடும்படி பிடர் பிடித்துத் தள்ளிவந்த நமது பெண்மக்கள் கண்காணச் சிலர்

கிழே வீழ்ந்து மண்டையுடைந்தும், சிலருக்கு இடுப்பு முறிந்தும் சிலருக்குக் காலோய்ந்தும், சிலருக்கு தாகமெடுத்தும் தத்தளித்துத் தடுமாறி நிற்கும் இந்தக் கஷ்டமான சமயத்திலாவது நமது நிலைமையை நாம் ஆராய்ந்தறியவேண்டுமன்றோ?

இந்தியாவிற் பணமுள்ள கூட்டத்தாரில் நம்மவரைப் பார்க்கிலும் நடப்பிற் செட்டாகச் செலவுசெய்து வாழ்பவர் யாருமில்லை யென்று கூறுவது மிகையாகாது. அவ்வளவு செட்டாக வாழ்ந்து வருகிற நமது சமூகத்துக்கு அளவில்லாத பணத்தேவையும் ஒரு சுகமுமில்லாமற் கஷ்டப்பட்டுத் தேடித்தேடி வைத்த பொருள் ஓடி ஓடிப் போவதும் மாருத பணக்கவலையும் ஏக்கமும் ஏன் வரவேண்டும்? சாதாரணமான ஒரு குடும்பத்துக்கு வருஷம் ஒன்றுக்கு குறைந்தது ஐநூறு ரூபாயும் அதிகமானல் இரண்டாயிர ரூபாய் வரையிலும் செலவாகலாம். நியாயமான செலவு அதற்கு மேலாகாது. ஏவலாட்கள் வண்டி வாகனம் அடிக்கடி பிரயாணம் முதலிய சற்று உயர்ந்த வாழ்க்கைக்குத்தான் வருஷம் ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய் வரையிற் செல்லும். மற்றபடி சாதாரண முறையில் சௌக்கியமாக வாழ்வதற்கு வருஷம் ஒன்றுக்கு ஐநூறு ரூபாய்க்குமேற் செலவாகாது. இந்த ஐநூறு ரூபாய்க்கு மூலதனம் ஐயாயிரம் ரூபாயும் இரண்டாயிரம் ரூபாய்க்கு மூலதனம் இருபத்தையாயிர ரூபாயும் போதுமானதாகும். ஐயாயிர ரூபாயை வைத்துக்கொண்டு வருஷம் ஒன்றுக்கு ஐநூறு ரூபாய் தேடுவதும் இருபத்தையாயிர ரூபாயை வைத்துக்கொண்டு வருஷம் ஒன்றுக்கு இரண்டாயிர ரூபாய் சம்பாதிப்பதும் வட்டித் தொழிலிற் பழகியிருக்கிற நமது சமூகத்திற்கு

சிரமமாக இருக்காது. ஆனால் அவ்வளவு கிடைத்ததும் போதுமானதென்று கையைக் கட்டிக்கொண்டு சோம்பேறிகளாக இருந்துவிட வேண்டுமென்று நான் சொல்லவரவில்லை. அதற்கு மேலும் கடன்படாமல் கவலைப் படாமல் வஞ்சனை, சூது, பொய், புரட்டு முதலிய பாப காரியங்களைச் செய்யாமல் பிறர் பொருளுக்கு ஆசை வைக்காமல் நம்பிக்கை நாணயத்துடன் நல்ல வழியில் தொடர்ந்து தொழிற்செய்து கிடைத்ததற்கு திருப்தி யடைந்து சக்திக்கேற்றவாறு தானதருமங்களைச்செய்து வாழலாம். மனிதனுக்கு எப்போதும் முயற்சியும் சுறுசுறுப்பும் வேலையும் தளராத ஊக்கமும் வேண்டும். ஆனால் எந்த நிலைமையிலும் மனத்திருப்தியும் சந்தோஷமும் வேண்டும். அதுதான் நமது சமூகத்துக்கு இல்லை. எவ்வளவிருந்தாலும மனத்திருப்தியும் சந்தோஷமும் ஏற்படுவதற்கு வழியில்லை. அதற்கென்ன காரணமென்பதைத் தான் நாமிப்போது ஆராயவேண்டும். நம்மிற் கல்யாண விஷயம் முழுமோசமாக இருக்கிறது. அளவில்லாத பணத் தேவையை யுடையதாக இருக்கிறது. பெருவயிறு படைத்த பூதமாக இருக்கிறது. சாமான்யமான ஜனங்கள் அதை (கல்யாணத்தை) நெருங்கிவிட்டால் முன்னுள்ளது பின் வருவது வீடு வாயில் காணி பூமி முன்பின் பெற்ற பிள்ளைகள் இவ்வெல்லாவற்றையும் பற்றி சிந்திக்க வேண்டியவர்களாகிவிடுகிறார்கள். என்ன பரிதாபம் பாருங்கள்! உலகத்தில் பிறந்த மக்களும் ஏனைய ஊர்வன, நடப்பன, பறப்பன, நீர்வாழ்வன முதலிய சகல பிராணிகளும் ஆணுடன் பெண்ணும் பெண்ணுடன் ஆணும் கூடி வாழ்வது இயற்கை. மனித வாழ்க்கையில் இவ் வியற்கை பேரறிவோடு அழகு

பெறத் திகழவேண்டுமென்றி வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கலாமா? அப்படி இடையூறாக இருக்கும் ஒரு விஷயத்தை சீர்திருத்தி நாமும் உலகத்தோடொட்டி நல்வாழ்வு வாழ முயற்சிக்க வேண்டுமன்றோ?

விவாஹ விஷய மென்னும் அஸ்திவாரத்திலிருந்து தான் நம்மவர்க்குப் பணத்தேவை யென்னும் முடிவு பெறாத கஷ்டம் எழும்புகிறது! தகுதிக்கேற்ப சம்பந்தம் வரவேண்டுமென்றாலும் சரி. பெண்களைச் சும்மா செய்தாலும் சரி. பிள்ளைகளுக்குக் கொடுத்துக்கொண்டாலும் சரி. சஷ்டியப்தபூர்த்தி சாந்தியாயினும் சரி. ஸ்வீகாரம் செய்துகொள்வதாயினும் சரி. ஏனைய சிறு விசேடங்களாயினும் சரி. ஒன்றும் சுலபமாக முடியக் கூடியதில்லை. எல்லாம் பெருஞ் செலவினங்களாகவே இருக்கின்றன. ஆகவே பணத்தேவையில் வித்தியாச மில்லை. பணத்தேவையோடு அதற்கு மேலும் பணக்காரன் என்று பெயர்பெற வேண்டியதிருக்கிறது. அந்த ஆசையின் காரணமாக தேவையில்லாத பெரிய பெரிய வீடுகள், தேவைக் கதிகமான ஆடையாபரணங்கள், சக்திக்கதிகமான ஆடம்பரங்கள், ஆர்ப்பாட்டங்கள் முதலிய செலவினங்கள் ஏற்படுகின்றன. அப்போது பெரும் பொருளீட்டுதற்கு வாழ் நாட்களை யெல்லாம் தியாகஞ் செய்தும் பெருங் கடன்பட வேண்டியதாகிறது. பெருங் கடன் துன்பத்தை உண்டாக்குகிறது. துன்பம் வாழ்க்கையையே நாசஞ்செய்து விடுகிறது.

பேதைமை சார்வாச் செய்கையாகும்
செய்கை சார்வா வுணர்ச்சியாகும்
உணர்ச்சி சார்வா வருவுருவாகும்
அருவுருச் சார்வா வாயிலாகும்

வாயில் சார்வா வூறுகும்மே.
ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கையாகும்
வேட்கை சார்ந்து பற்றுகும்மே.
பற்றிற் றேன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரணமாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றம்
தோற்றம் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவலம ரற்று கவலைகை யாறெனத்
தவலி றுன்பம் தலைவரு மென்ப
ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி.

—மணிமேகலை.

என்று பௌத்த கரும நூல்களிற் கூறுகிறபடி பேதை மையிலிருந்து செய்கையும், செய்கைகளிலிருந்து உணர்வும், உணர்விலிருந்து நாம ரூபங்களும், நாம ரூபங்களிலிருந்து வாயில்களும், வாயில்களிலிருந்து ஸ்பரிசமும், ஸ்பரிசத்திலிருந்து வேட்கையும், வேட்கையிலிருந்து பற்றும், பற்றிலிருந்து கரும கூட்டமும், அதனல் பிறப்பும், பிறப்பிலிருந்து மூப்பு, மரணம், நோய், அழுகை, துன்பம், கவலை, ஏக்கம் ஆகிய வினைப்பயன்களும் தொடர்ச்சியாக உண்டாவன போல நமது சமூகத்திற்கு சீர் குலைந்து ஒருவழிப் படாத விவாஹ விஷயத்திலிருந்து மேற்கூறியபடி தொடர்ச்சியாக சமூக வாழ்வை நாசஞ்செய்கிறவரை துன்பமும் கஷ்டமும நஷ்டமும் உண்டாகின்றன. இத்துன்பத்தை நீக்குதற்கு மூலகாரணமாகிய விவாஹ விஷயத்திலுள்ள சீர்கேட்டையும் அதனலேற்படும் பெருஞ் செலவுகளையும் மாற்றினலன்றி எந்த வகையிலும் நமது சமூகம் மனத்திருப்தி

யும் ஆறுதலுமடைய வழியில்லை. நம்மவர் தொழிற் செய்யுமிடங்களாகிய இலங்கை, பர்மா, மலாயா, அன்னும் முதலிய அயல்நாடுகளும், உள்நாடுகளும் சுபிக்ஷமாக இருக்கும் காலத்திற்கூட நம்மவரின் கல்யாண காரியத்துக்குப் பெருந்தடையும் பணத் தேவையும் சிரமமும் கவலையும் நிவர்த்தியானதில்லை. இப்போது உலக முழுதுமே செல்வநிலை சீர்கேடுற்று நம்பிக்கையும் நாணயமு மில்லாமல் தடுமாறுகின்றன. ஜெர்மனி, பிரான்சு, பெல்ஜியம், ஹங்கேரி முதலிய பெரிய தேசங்களுங்கூட தாங்கள் செலுத்த வேண்டிய கடன்களைச் செலுத்தக்கூடாம லிருக்கின்றன. இந்த நிலைமையில் நம்மவர் இனிப் பெரும்பொருள் தேடுவதும் பெருஞ் செலவு செய்வதும் எப்படி முடியும்? இனி ஒரு காலம் நல்லதாக வந்தாலும் அது நிலையானதென்று எப்படி நம்புவது? மேடுகண்டபின் பள்ளமும் பள்ளங்கண்ட பின் மேடும் காண்பது இயற்கை. உலக நிலை ஒரு படியாக இராது மாறிமாறித்தான் வரும். அந்த மாறுதல் நம்மைப் பாதிக்காமல் நாம் நம்முடைய வாழ்க்கை முறைகளைச் சரிப்படுத்திக்கொள்ள வேண்டுமன்றோ! அப்படிச் சரிப்படுத்திக்கொள்வது சிலருக்குத் தேவையென்றும் சிலருக்குத் தேவையில்லாத விஷயமென்றும் சொல்லமுடியாது. நமது சமூகத்துக்கே முக்கியமான காரியமாக இருக்கிறது. விவாஹ விஷயத்தை ஒழுங்குபடுத்திக் கொள்வதும் அதனால் ஏற்படும் அனாவசியமான பணத்தேவைகட்கும் கஷ்ட நஷ்டங்கட்கும் கவலைக்கும் துக்கத்துக்கும் ஆளாகாமல் தப்பித்துக்கொள்வதும் நமது சமூகத்துக்கு எதிரிலுள்ள ஒரு முக்கியமான வேலையாகும். அந்த முக்கியமான வேலையைத்

திருப்தியாக முடிக்க வேண்டுமானல் சமூகத்துக்குள் மாப்பிள்ளைகட்குப் பெண்களும் பெண்கட்கு மாப் பிள்ளைகளும் சுலபமாகக் கிடைக்கும்படியும் சொற்பச் செலவில் சுலபமாக விவாகம் முதலிய விசேடங்கள் நடைபெறும்படியும் ஏற்பாடு செய்தல் வேண்டும். கல்யாண வீட்டில் அடுக்கடுக்காகச் சாமான் வைப்ப தென்ற கெட்ட வழக்கமும் பின் தொடர்ச்சியாக சீர் முறை கொடுப்பதென்ற அனுவசியமான காரியமும் ஒழியவேண்டும். கல்யாண முதலிய விசேட நாட்கள் குறைவுபடவேண்டும். கல்யாண காரியம் ஒரு பெரு மலையாகத் தோற்றுவதும் இந்தப் பெரிய காரியத்தை யெப்படி முடிக்கப் போகிறோமென்ற ஏக்கமும் கவலை யும் இல்லாமல் தீரவேண்டும். இன்னும் இந்தச் சிக்க லான கார்யத்தாலேற்படுகிற பல கஷ்டங்கட்கும் சமா தானம் வேண்டும். இப்போதுள்ள நிலையில் துருப் பிடித்துப்போன பழைய பழக்க வழக்கங்களை அப்படி அப்படியே வைத்துக்கொண்டு இந்த நன்மைகளை யெப் படிச் செய்து கொள்ள முடியும்? செய்து கொள்ள முயன்று நாமும் உலகத்தோ டொட்டிய புதிய வழி களிற் சென்றாலன்றி முடியக்கூடியதில்லை. பெண் களுக்கு கிராக்கியில்லாமற் செய்தாலன்றி விவாக விஷ யத்தாலேற்படும் திகில் ஒழியாது.

ஆகவே புருஷர்களைப்போற் பெண்களிலும் விருப் பமுள்ளவர்கள் மறுமணம் செய்துகொள்ளுவதை சமூ கம் அங்கீகரிக்க வேண்டும். ஆனல் புருஷரை இழந்த பெண்களெல்லாம் மறுமணம் செய்துகொண்டுதானக வேண்டுமென்ற கட்டாயமில்லை. இஷ்டமில்லாதவர் கள் தங்கள் வைதவ்வியத்தைக் காப்பாற்றிக்கொள்ள

லாம். இஷ்டமுள்ளவர்கள் கட்டாயத்துக்காக அப்படி யிருக்கவேண்டியதில்லே. அவர்கள் தங்கள் இஷ்டப்படி மறுமணம் செய்துகொள்ளும் உரிமையுடையவர்களாக இருக்க வேண்டும். அதிலிருந்து பல கஷ்டங்களும் தனித்தனியே விடை பெற்றுக்கொள்ள ஆரம்பித்து விடும். மனேவியை இழந்த புருஷர்கள் புருஷனே இழந்த பெண்களே மணம்செய்து கொள்ளலாம். பெண்கொள் ளக்கிடைக்காத சாமான்ய ஜனங்களும் புருஷனே இழந்து ஆதரவற்று வேறு வழியின்றி நிற்கும் பெண்களே மணந்து கொள்ளலாம். இளம் பிராயத்தில் ஒன்றையும் அனுபவிக்காமல் வீண் தண்டத்துக்கு வாழ்விழந்து நிற் கும் சிறுபெண்கள் அவர்கள் விருப்பம்போல் வாழ்க் கைப்பட்டு கவலே நீங்கலாம்.

பெண்களுக்கு மறுமணம் செய்யும் ஏற்பாடிருந் தால் முதலாவது பெண்ணுக்குப் பணம்கொடுத்தலென் னும் அபாயமான பெரிய தேவை ஒழியும்; எல்லோரும் மங்களமாக வாழ்வார்கள்; சாமான்ய குடும்பங்களுக்குக் கல்யாணத்தைப்பற்றிய அச்சம் தீரும். சாமான் சேக ரித்தல், சாமான் வைத்தல், அதைக்கண்டு மகிழ்தல் என்னும் வேலேயற்ற வேலே ஒழியும். அந்த ஆகாத சாமான்களுக்கு அடுக்கடுக்காக அறைவீடுகளும் அதன் அங்கங்களாக மச்சு மாளிகைகளும் வேண்டாம். டம் பச் செலவுகளுக்கு அவசியமிராது. அவலே நினேத்துக் கொண்டு உரலே இடிக்கவேண்டாம். கல்யாணத்தைத் தொடர்ந்து செய்யப்படும் சீர் முறைகளுக் கெல்லாம் வால் நீளாது. திடசரீரிகளான சந்ததி உண்டாகும். அலங்கோலமான யாத்திரை, அநாகரிகமான சஞ்சாரம். அசட்டுத்தனமான சச்சரவுகள் ஒழியும். "உறங்குவது

போலும் சாக்காடு, உறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு" என்ற முதுமொழிப்படி பிறந்தபொழுதே இறப்பது நிச்சயம். நிச்சயமாயினும் அந்தச்சாவு அகாலத்தில் நேர்ந்தால் அது துக்கந்தான். ஆயினும் அந்தத் துக்கம் ஒரு சில நாட்களில் அல்லது மாதங்களில் அல்லது வருஷங்களில் மறைந்துவிடுகிறது. மனம் ஆறுதலடைந்து சமாதானமுமாகி விடுகிறது. ஒன்றுமறியாத சிறுபெண்களுக்குக் (கல்யாணம்) களியாட்டுச் செய்து ஆடையாபரணங்கள் அணிவதில் தங்கள் கைவரிசையைக் காட்டி தடபுடலாகத் திரிந்துவிட்டு தங்கள் கடன் தீர்ந்துவிட்டதாக அகமகிழ்ந்த பெற்றோர்கள், அந்த மருமகனுக்கு அற்பாயுசாக மரணம் சம்பவித்துவிட்டால் அந்த இயற்கையான துக்கம் ஒருபுறமிருக்க, தாங்களாக வருவித்துக்கொள்ளுகிற துக்கம் பெரிதாகி சிறு பொழுது மணையிலிருந்த தண்டத்துக்காக அப்பெண்ணை அலங்கோலப்படுத்தி அதன் உயிரை வாங்குவதுபோல் ஆடையாபரணங்களையெல்லாம் வாங்கி அழுகைபழக்கி சிந்திய மூக்கும் சிவந்த கண்ணுமாய் முக்காடிட்டு மூலையில் வைத்து அந்த துரதிஷ்டமுள்ள பெண் ஒப்புச்சொல்லி அழத் தாங்களும் அழுது, விடிந்தெழுந்தால் அப்பெண்ணைப் பார்த்துப் பார்த்து மாறாக்கவலை யடைகிறார்கள். மறுமணம் செய்வதென்ற ஏற்பாடிருந்தால் இந்த அனாவசியமான துக்கத்துக்கும் கவலைக்கும் துரதிஷ்டத்துக்கும் இடமிருக்குமா?

உலகத்தின் பல பாகங்களிலும் இருநூறு கோடி ஜனங்களிருக்கிறார்கள். அவர்களில் இந்தியாவைத் தவிர ஏனைய தேயத்துப் பெண்கள் மறுமணம் செய்துகொள்வதில் ஒரு தடையுமில்லை. இந்தியாவிலுள்ள முப்பத்

2

ைதந்து கோடி ஜனங்களிலும் மகம்மதியர், கிரிஸ்துவர், சீக்கியர், பார்சிகள் மூன்றில் ஒரு பாகத்தினராக இருக்கிறார்கள். அவர்களுள்ளும் பெண்களின் மறுமணத்துக்குத் தடைகளில்லை. எஞ்சிய இரண்டு பாகத்தினரான சுமார் இருபத்திரண்டு கோடி ஹிந்துக்களில் இருபது கோடி ஹிந்துக்கள் ஆண்களும் பெண்களும் மறுமணம் செய்துகொள்ளும் வழக்கமுடையோராக இருக்கின்றனர். இனி மீதமிருப்பது இரண்டு கோடிதான். இந்த இரண்டு கோடி மக்களிலும் ஒரு கோடியான ஆண் மக்கள் மறுமணம் மூன்றும் மணம் நான்காம் மணம் என்று மணம் மணமாகச் செய்து கொள்வதில் தடைகளில்லை. ஆகவே உலகின் ஜனத் தொகையில் இருநூற்றில் ஒரு பாகந்தான் துரதிஷ்டமுள்ள பாகமாக இருக்கிறது. அந்தத் துரதிஷ்டமுள்ள குறுகிய மைனாரிட்டியில் நமது சமூகமும் ஒன்றாக இருக்கிறது. பெண்கள் மறுமணம் செய்து கொள்ளுவதால் பெருந் தீமைகளுண்டாகி விடுமென்று அஞ்சுகிறவர்கள் மேற்கூறிய நூற்றுத் தொண்ணூற்றொன்பது கோடி ஜனங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அந்த சமூகமெல்லாம் கெட்டுப்போய் விட்டனவா. இல்லையே. நம்மினும் சிறப்பாக வாழ்கின்றனவே. "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும் கல்லாரறிவிலாதார்" என்ற திருக்குறட் செய்யுளுக்குப் பரிமேலழகர் உரையின் விளக்கத்தில் "அறநூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதன ஒழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பனகொண்டு வருதலான் அவையுமடங்க உலகத்தோடொட்ட வென்றும்" என்று கூறியிருப்பது பெரிதும் போற்றதக்கது. கால தேச வர்த்தமானங்களை யனுசரித்து ஜனசமூகத்

துக்கு எவை எவை நல்லனவாக இருக்கின்றனவோ அவைகளைக் கைக்கொள்ளுதல் தான் விவேகமாகும். இரண்டாயிரம் வருடங்கட்கு முன்பிருந்த பழக்க வழக்கங்கள் இப்போது பொருந்துமா? இரண்டாயிர வருடங்கட்கு முன் நம்மவர் தூரதேயங்கட்குக் கப்பல் யாத்திரை செய்து அங்கு வட்டிக்கடை வைத்துத் தொழிற் செய்ததுண்டா? சட்டை தொப்பிகள் அணிந்ததுண்டா? மோட்டார்க் காரில் ஏறியதுண்டா? ஆகாயத்திற் பறந்ததுண்டா? இங்கிப் புட்டியும் பேனாவும் வைத்துக் கொண்டு கடிதமெழுதியதுண்டா? பெங்களூர்ப் புடவைகளுண்டா? வயிர நகைகளுண்டா? வெள்ளிப் பாத்திரங்களுண்டா? கல்யாண முதலிய விசேடங்களில் சமையற் செட்டுண்டா? கூடை கூடையாகப் பழங்கள் வந்ததுண்டா? யானை குதிரை முதலிய எடுபிடிகளுண்டா? மங்கு, மரவை, பீங்கான், ஜாடிகளுண்டா? வீடு நிறையச் சாமான்கள் வைத்ததுண்டா? பெரிய பெரிய வீடுகளுண்டா? அதில் இத்தாலி, பிரான்சு, இங்கிலாண்டு, ஜர்மனி, ஜப்பான் முதலிய தேயங்களின் தளக்கற்கள் பதித்ததுண்டா? மின்சார விளக்குகள் தண்ணீர்க் குழாய்களுண்டா? இன்னும் இவைபோல் எத்தனையோ புதிய சௌகரியங்கள் ஏற்பட்டு அவறறை நாமும அனுபவித்து வருகிறோமன்றோ! அவையெல்லாம் பழைய முறைகளல்ல வென்று தள்ளி விட்டோமா? புதிய முறைகளென்றாலும் ஜன சமூகத்துக்கு நல்லவை யென்றுதானே ஒப்புக்கொண்டிருக்கிறோம். அதுபோல் இன்னும் நல்லதென்றிருப்பதை யேன் அங்கீகரிக்கக்கூடாது? பெண்களுக்கு மறுமணம் செய்வது தீமையென்று ஒருவரும் நிரூபிக்க முடியாது. வழக்கமில்லாத கரியா

மென்றுதான் சொல்லமுடியும். வழக்கமில்லாத காரிய மாயினும் அனுபவத்தில் நல்லதாயின் அதை மாற்றிக் கொள்வதாற் குற்றமொன்றுமில்லை. புதிய வழக்கங் கள் முதலெடுப்பில் நெடுநாட் பழகிய மனத்தின் தன் மையால் அனுசிதமான காரியமாகத்தான் தோற்றும். காலமாகவாக அத்தோற்றம் மாறிவிடும். பிறகு அதன் பலனும் நன்மையும் ஒரு சிறைக்கூடத்திலிருந்து விடுபட் டது போலிருக்கும். இது உலகானுபவத்தில் நாம் காணக்கிடக்கும் உண்மையாம்! ஒரு காலத்தில் ஹிந் துக்களில் ஒரு வகுப்பார் புருஷனையிழந்த பெண்களை உடன்கட்டை யேற்றிச் சுட்டுவந்ததாகவும் நூறு வரு ஷங்கட்கு முன் அவ்வழக்கம் சட்டபூர்வமாகத் தடுக்கப் பட்டதாகவும் நாம் அறிகிறோம். அத்தகைய பெண்கள் இப்போது பழிக்கப்படவில்லை. நம்முள்ளும் சுமார் முப்பது வருஷங்கட்கு முன் புருஷனையிழந்த பெண்கள் கழுத்தில் சரடு என்னும் ஒரு தங்க வளையத்தையும் பிறகு உருத்திராக்ஷத்தையும் அணிந்திருந்தார்கள். இப் போது நல்ல நல்ல தினுசான சங்கிலிகள் மோதிரங்கள் அணிந்து கொள்ளுகிறார்கள். இதுவும் பழிக்கப்பட வில்லை. ஆதலால் பெண்களுக்கு மறுமணம் செய்வ தால் யாதொரு தோஷமும் விபரீதமும் குற்றமும் ஏற் பட்டுவிடாது. நமது சமூகத்தில் விவாக விஷயத்தா லேற்படும் சீர்கேட்டினாலும் பெருஞ் செலவினாலும் பல குடும்பங்கள் சகிக்க முடியாத கஷ்ட நஷ்டங்களை யடைந்து வருகின்றன வென்று பொதுவாகச் சொல் வதைப் பார்க்கிலும் சில குடும்பங்களின் சரித்திரங்களை மாதிரிக்கொன்றாக இங்கு எடுத்துக்கூறுதல் பயன்படு மெனக் கருதி சில நிகழ்ச்சிகளை மட்டும் உதாரணமாகக் கூறுகிறேன்.

## முதற்கதை.

நாற்பது வயதுவரை ஒருவர் நல்ல கடைகளுக்கு ஏஜண்டாகப் போய்வந்து சம்பளமும் சாயான் (கமிஷன்) தொகையும் பெற்றும் தனதிற் சிலகூட்டுத் தொழில்கள் செய்தும் ஒன்றரை லட்ச ரூபாய் பணமுள்ளவரென்று மதிக்கப்பட்டிருந்தார். அப்போது அவருக்கு நான்கு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்திருந்தனர். மூத்த மகனுக்கு வயது பதினெட்டு. அவனும் கெட்டிக்காரன். ஆனால் காதுமட்டும் கொஞ்சம் மந்தம். மனைவி ஒரு துஷ்ட தேவதை. மகனுக்குப் பெண் சும்மா வருமென்று எதிர்பார்த்தார். வரவில்லை. சும்மா வாராததற்கு நல்ல வீடில்லாமையே காரணமென்று தீர்மானித்துக்கொண்டார். உடனே வீடுகட்ட ஆரம்பித்து எண்பதாயிர ரூபாய் செலவிட்டு ஒரு வீடும் கட்டி முடிந்தது. பெண் சும்மா வருவதாக இல்லை. மனைவி பொல்லாதவளாகவும் மகனுக்குக் காது மந்தமாகவும் இருப்பதுதான் உண்மையான காரணமென்று தெரிந்து கொண்டார். மகனுக்கு வயது இருபத்தொன்றாகிவிட்டது. இனி சும்மா இருக்கப்படாதென்று கொடுத்துக் கொள்ள நினைத்தார். அது போல் எழு வராகன் கொடுத்து கல்யாணம் முடிந்தது. கல்யாணம் முடிந்த ஒரு வருஷத்தில் அப்பெண் பிரசவத்தில் இறந்துபோனாள். கையில் மிதப்பாக இருந்த பணமெல்லாம் தீர்ந்துவிட்டது. கஷ்டகாலம் ஆரம்பித்துவிட்டது. கைக்குதவியாக இருக்கிற மூத்த மகனுக்கு மறுமணம் செய்யாமல் மற்ற பிள்ளைகளைப்பற்றிச் சிந்திக்க அவர் மனம் செல்லவில்லை. பின்னும் பத்து வராகன் கொடுத்துப் பெரு முயற்சியும் செய்து மூத்த மகனுக்கு மறுமணம்

செய்துவைத்தார். மற்ற பிள்ளைகளும் ஒருவர் பின் ஒருவராகக் கல்யாண வயது வந்தவர்களாகி விட்டனர். கையிற் பணமில்லை. கடனும் கொஞ்சமிருந்தது. ரகசியமாக வீட்டை யிடுவைத்து எழு வராகன் கொடுத்து இரண்டாவது மகனுக்குக் கல்யாணம் செய்துமுடித்தார் மூன்றாவது பையனும் பெரியவனாகிவிட்டான். வேறு வழி யொன்றுமில்லாததினால் நான்காவது பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொடுத்தும் போதாமல் கொஞ்சம் கடனும் வாங்கி மூன்றாவது கல்யாணத்தை முடித்தார். கடன் அதிகமாயிற்று. கடன் நிர்ப்பந்தமும் ஆரம்பித்து விட்டது. உடல் நிலையும் தளர்ந்து விட்டது. முன் போற் சம்பாத்தியத்துக்கும் இடமில்லை. ஆகவே கடன் தீரவும் குடும்ப காலக்ஷேபத்துக்கும் வேறுவழி யொன்றுமில்லாமல் நான்கு ஆண் குழந்தைகளுக்கும் பிறகு தேடித் தவமியற்றிப் பெற்று அருமையாக வளர்த்து அள்ளி அள்ளிக் கொடுத்துச் செய்வதாக வைத்திருந்த பெண்ணைப் பெருந்தொகை வாங்கிக்கொண்டு எங்காவது ஒரு படுகுழியிற்றள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. ஞான சூன்யமான பணக்காரர் ஒருவர் சஷ்டியப்தபூர்த்திக்குப் பெண்வேண்டியவராயும் முன் இரண்டு தாரங்களைத் தின்றவராயும் மாமனாருக்கு நான்கு வருஷங்கட்கு முப்புடையவராயும் ஸ்வீகார தந்தங்களை யுடையவராயும் யௌவனத்தையும் அழகையும் பறிமுதல் செய்யப்பட்டவராயும் மூளை நரம்புகளில் ஈரப்பசையற்றவராயும் ஒரு மாப்பிள்ளைப் பிணம் வந்துசேர்ந்தது. பெண்ணைப் பார்த்தது. பிரியங் கொண்டது. அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் ஐம்பதாயிர ரூபாய்களைக் கொடுத்தது. மாப்பிள்ளைக் கோலங் கொண்டது. மணையிலி

ருந்தது. குதிரையேறிக் குடியுமழைத்துக்கொண்டது. கல்யாணம் முடிந்தது. மறுவழி வந்தபெண் மாறி அந்தவழி போவதில்லை. சதா அழுகையும் ஆத்திரமும் துக்கமும் துயரமுமாக இருந்தது. அடுத்த வருஷம் தாயும் தந்தையும் செய்த பிரார்த்தனைக்காக சஷ்டியப்தபூர்த்தி கல்யாணத்துக்கு ஒரு முறை மனையிற் கண்ணீர் பெருக அழுதுகொண்டிருந்து அந்தக்கடனைக்கழித்துப் தாய் வீடு சேர்ந்தது. கிழப் பிணம் வெறு வாயை மென்று வீணாக அலைந்து மனம் சோர்ந்து இனி இந்த உலகத்தில் ஞானமில்லாத தனக்கு யாதொரு ஜோலியு மில்லையெனக் கண்டு ககன மார்க்கமாகச் செல்வதென்று நிச்சயித்துக் கண்களை மூடிக்கொண்டது. தகனக் கிரியைகள் சிறப்பாக நிறைவேறிற்று. (சமூக வழக்கம் என்னும்) வாரண்டின் பேரில் பெண்ணை (Arrest) அரெஸ்டு செய்து கொண்டுபோய் ஆயுள் பரியந்தம் சிறைவாசம் செய்யும்படி தீர்ப்பாகிவிட்டது. ஆடையாபரணங்களெல்லாம பறிமுதல் செய்யப்பட்டன. ஏன்? குற்றம் பெரிதல்லவா! கொலை, களவு, கொடுந்துன்பங்கட்கெல்லாம் இது மேலான பெரிய குற்றமன்றோ?

இவ்வளவும் பத்துவருஷங்கட்குள் ஒரு நல்ல குடும்பத்துக்கு நேர்ந்த அனர்த்தங்களாகும். ஒரு மனிதன் தன் வாழ்நாளில் தன்னுடைய சொந்தப் பிரயாசையால் நாற்பதுவயதுக்குள் ஒன்றரை லட்ச ரூபாய் சம்பாதிப்பது இலகுவான காரியமல்ல. எழுவாய் பயனிலை யில்லாத இந்த சமூகத்திற் பிறவாமல் அந்தமனிதன் வேறு சமூகத்திற் பிறந்தவராக இருந்தால் அவர் தேடிய பொருள் பின்னும் விருத்தியாகி அவரும் நிரம்ப மனத்திருப்தியோடு மிகமிகச் சுகமாக வாழ்ந்திருப்பார்.

நான்கு மக்களுக்கும் பெண்வரவேண்டியது கருதியே பெரும்பொருள் செலவிட்டு வீடுகட்டினர். இல்லாதிருந்தால் அந்த வீட்டுக்குப் பெரும்பணம் வீணுகியிராது. ஒவ்வொரு மகனுக்கும் முப்பது முப்பத்தையாயிரம் செலவுசெய்து கல்யாணம் செய்வதென்றால் எங்கிருந்து பணம் வரும்? எப்படித்தான் சம்பாதிப்பது? இவர் விஷயத்தில் அப்படி நேர்ந்ததற்குக் காரணம் அவருடைய பொல்லாத மனைவிதா னென்றால் எந்த வீட்டில் நல்ல குணமுள்ள மனைவி யிருக்கிறாள்? நூற்றுக்கு நூற்றி ஒன்று படிப்பில்லாதவர்களும் படிப்பில்லாக் குறையினால் நூற்றுக்கு எழுபத்தைந்து நற்குணமில்லாதவர்களுமாக இருக்கிறார்கள். இந்த நிலைமையில் பொல்லாத மனைவியின் பேரில் குற்றமென்ன? இதிற் செட்டியார் தவறு செய்து விட்டார்; அதனாற்றான இத்துன்பங்களெல்லாம் உண்டாயிற் றென்று சொல்லுவதற்கிடமுண்டா? சிறிதுமில்லை. அவர் சரியாகவே நடந்துகொண்டார். வேறுகாரணமென்ன? கேடுகெட்ட சமூக வாழ்க்கை தான் இந்தத் துன்பங்கட் கெல்லாம் காரணமென்பதைச் சொல்லவும் வேண்டுமா? கல்யாண காரியம் சுலபமாக இருந்தால் வீட்டுக்குப் பெரும் பொருள் தேவையில்லை, காது மந்தமாக இருந்தாலும் கல்யாணத்துக்குப் பஞ்சம் வந்துவிடாது. முதல் தாரம்போனல் மறுதாரத்துக்கு மறுமணப்பெண்கள் வந்துவிடுவர். மற்ற கல்யாணங்களும் தங்கு தடையின்றி முடிந்திருக்கும். பணத்தேவையே யேற்பட்டிராது! கிளியைவளர்த்து அந்தப் பாழான கிழத்துக்குக் கொடுத்திருக்க வேண்டாம். அந்தக் கிழமும் ஒரு பெண்ணை நினைத்திருக்காது! நினைத்திருந்தாலும் கல்யாணம் முடியாது!! கல்

யாணம் முடிந்திருந்தாலும் கவலைவராது!!! என்னசெய்ய லாம்? இந்த அபாயமானதும் மனித சமூகத்துக்கு அனர்த்தமானதும் கஷ்டமேயன்றி சுகமில்லாததும் துன் பத்துக்கு ஒப்பந்தம்போ லிருப்பதுமான நமது சமூக விஷயத்தின் சீர்கேட்டை யென்னென்று கூறுவது?

ஒன்றரை லட்சரூபாய் பணமுள்ள மனிதன் நான்கு மக்களுக்குக் கல்யாணஞ் செய்துவைக்க முடியாமல் ஒரு பிள்ளையையும் ஒருபெண்ணையும் விற்றுத் திணறித் திண்டாடித் தப்பிப் பிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்றாகிவிட்ட தென்[illegible]ற்ற [illegible]ன்ய குடும்பங்களின் கதி யென்னவாகு மெ[illegible]த [illegible]படி வருணிப்பது? ஒரு (Principle) நியமமுமில்லாத [illegible]மது சமூகத்தின் பழக்க வழக்கங்களை எப்படிப் புகழ்ந்து கூறுவது?

## இரண்டாங்கதை.

இன்னும் ஒரு தினுசில் இன்னும் ஒரு குடும்பத்தின் சரித்திரத்தைக் கேளுங்கள்! ஒருவருக்கு ஐந்து பெண் குழந்தைகள். ஆண் குழந்தையில்லை. செட்டியார் மற்ற வர்களைப்போல் தூரதேசங்கட்குப்போய் வருபவ ரல்லர். ஊரில் குடியானவர்களிடம் ஆடிக்குத் தை பத்து மாதம் என்று கணக்கிட்டு வட்டிக்கு வட்டி சேர்த்து அந்த வட் டிக்கும் வட்டி சேர்த்து நன்செய் புன்செய் ஆடுமாடு இவை களைக் கைப்பற்றிக்கொண்டிருப்பவர் பரமலோபி. ஆனால் இந்த உத்தம புருஷருக்கு பூர்வபுண்ணிய வசத்தால் மனைவி மிகவும் நல்லவர். பெண்கள் பெரிய பிள்ளைக ளாகிவிட்டனர். பெண்கேட்கப் பலரும் வந்தனர். ஒரு பெண்ணுக்கு இருபத்தையாயிரத்துக்குக் குறையப் பேச்சில்லை யென்று செட்டியார் தீர்மானமாகக் கூறி

விட்டார். ஆனால் மாப்பிள்ளைகளைப் பற்றியாவது சம்பந்திகளைப் பற்றியாவது இடந் தலம் வீடு வாசல்களைப் பற்றியாவது தெரிந்துகொள்ள வேண்டிய பொறுப்புகள் யாவும் மனைவி மக்களைச் சார்ந்தது. பணத்தைப்பற்றிய விஷயம் ஒன்று தான் அவருடையது. அது போல் ஒன்றன்பின் ஒன்ருக நான்கு பெண்களுக்குக் கல்யாணமாயிற்று. சொறிபிடித்தவனும், சூனைவயிற்றனும், ஒட்டைவாயனும், ஒடுக்கு மூஞ்சியுமாக அலைக்கழிந்த மாப்பிளைகள் நால்வர் வந்து மாமனர் வீட்டை அலங்கரித்துக்கொண்டிருந்தனர். ஆனல் மாமனர் அதைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படுவதில்லை. கப்பலேருமல் கஷ்டப்படாமல் கொள்முதல் செய்யாமல் கொண்டு விற்காமல் கணக்கெழுதாமல் கவலைப்படாமல் செலவு நீக்கி ஐம்பது அறுபதாயிர ரூபாய் ரொக்கமாகத் தேடிக்கொண்ட தனது சாமர்த்தியத்தை நினைந்து நினைந்து சந்தோஷிப்பர். தம்மைத் தாமே புகழ்ந்துகொள்ளுவர். சில சமயங்களில் தூர தேசங்கட்குப்போய் நயமில்லாமல் திரும்பி வருகிறவர்களைப்பற்றி ஏளனமும் செய்து மகிழ்வர். வெட்கம் ரோஷம் மானம் மரியாதை ஒன்றுமில்லாதவரும் அறிவும புத்தியும் அறவேயில்லாதவருமான பிதாவின் செய்கையால் நான்கு பெண்களும் வாழ்விழந்தவர்களைப்போற் சதா துக்கமுற்றவர்களாய் மனஞ்சலித்துத் தங்கள் கணவர்களை, கணவர்களென்று சொல்லிக்கொள்ளவும் வெட்கப்பட்டவர்களாய் அவமே காலங்கழித்து வரலாயினர். நிற்க,

செட்டியார் தமக்கும் மனைவிக்கும் கொள்ளிவைக்கவும் தங்களுக்குப்பின் தம் மக்களுக்கு முறைசெய்யவும் பொங்கற்பானை கொடுத்து வரவும் மாமச் சடங்கு

செய்து வரவும் பிள்ளை வேண்டுமே! இல்லாதிருந்தால் உற்ருர் உறவினர் பழிப்பதோடு புத் என்னும் நரகத்தையு மன்றோ அனுபவிக்க வேண்டும்!! ஆதலாற் பிள்ளை கூட்டுவது அவசியமென்று கருதினர். பிள்ளை கூட்டிக் கல்யாணம் செய்வதை உத்தேசித்தே கடைசிப் பெண்ணைக் கல்யாணஞ் செய்யாமல் இருபத்தையாயிர ரூபாய்களை தியாகஞ் செய்துவிட்டுப் பெண்ணை வைத்திருந்தார். பாபம்! அந்தப் பெண் ஆயுள்பலமில்லாமல் காலமாகிவிட்டாள்! சனிதிசை ஆரம்பித்து விட்டது!! ஆயினு மென்ன? கையிற் பணமிருக்கிறது. பிள்ளை கூட்டாமல் விடுவதா? கல்யாணம் செய்யாமல் விடுவதா? அந்த விஷயத்தில் செட்டியாருக்கு ரோஷமிருந்தது. பிள்ளை தேடினர். அவரதிஷ்டம் பருத்தி புடவையைக் காய்த்துவிட்டதுபோல் பிள்ளை பிள்ளையாக இல்லாமல் பேரிய ஆளாகவே ஒருவன் வந்து அகப்பட்டான். செட்டியார் பார்த்தார். சிறு பையன்களாகக் கூட்டினல் உண்ணக் கொடுத்து தின்னக் கொடுத்து உடுத்தக்கொடுத்து வளர்த்துப் படிக்கவைத்து வீணுகப் பல செலவுகளும் செய்து ஆளாகும்வரை செலவாகும் பணத்தையும் கணக்கிட்டார். தமக்கும் தம் மனைவிக்கும் அதிக வயதாகிவிட்டதையும் நினைத்துக் கொண்டார். பின்னும் பல சௌகரியங்களையும் கருதி தீர்க்காலோசனை செய்ததன்மேல் (Ready Made) தயாரான பிள்ளைதான் சரியென்று தீர்மானித்தார். பையனுடைய பிதா மாதாக்களுக்குக் கொஞ்சம் பணங்கொடுத்து அந்த முரட்டுப் பையனைக் கைப்பற்றிக்கொண்டார். ஆனல் ! கொஞ்சமும் தாமதமில்லாமல் கல்யாணம் 'செய்துவிட வேண்டிய அவசியம் நேர்ந்து விட்

டது. என்? "செம்மையி லறஞ்செய்பாதார் திரவி யம் சிதறவேண்டி நம்மையும், கள்ளும், சூதும் நான் முகன் படைத்தவாறு" என்று கூறிய ஒரு விலைமாதின் கூற்றுப் போல் பையன் ஸ்வீகாரமாக வந்தவுடன், தனது பூர்வாசிரமத்தில் உண்ணவும் உடுத்தவும் பட்ட சிரமங்களை யெல்லாம் மறந்துவிட்டான். கல்யாணவீடு, புதுமை வீடு, துக்க வீடுகளிலெல்லாம் அழையா விருந்தாக வலியப்புகுந்து அவர்களிட்ட வேலைகளையெல்லாம் தலையாற்செய்து முன்னோடும் பிள்ளையாக இருந்து இரவு பகலாக உழைத்து வயிறு வளர்த்த தெல்லாம் மறந்து விட்டான். பணக்காரப் பையன்களுக்குக் கையாளாகவும் தூதுவனாகவுமிருந்து ஏவல் வேலைசெய்து இரண்டொரு ரூபாய் கிடைப்பதைப் பெரிய வருவாயாகக் கருதி மகிழ்ந்ததை யெல்லாம் மறந்துவிட்டான். இப்படிப் பூர்வாசிரமத்திலிருந்த தன்னிலைமைகளை யெல்லாம் மறந்து, தன்னை யொரு பெரிய பணக்காரனாக அவன் நினைத்துக் கொண்டதில் அதிசயமில்லையன்றோ! எற்கனவே கொஞ்சம் குடிக்கப் பழகியிருந்தான். சூதாடவும் தெரியாதவனல்ல. தாசிவீடுகளைப்பற்றியும் தெரியும். ஆயினும் கையிற் பணமில்லாததினால் அந்தக் காரியங்களைச் சிறப்பாக நடத்தமுடியாதவனாக இருந்தானன்றி விஷயம் தெரியாமலிருக்க வில்லை. இப்போது செலவுக்கு முடையில்லை. ஆகவே சிறிது சிறிதாக ஆரம்பித்து விட்டான். நாளானால் நடத்தைகள் வெளியாகிவிடுமென்று பலரும் கூறினர். செட்டியார் ஓடி அலைந்து அவசரம் அவசரமாகப் பெண் பேசினார். இவர் வீட்டில் பெண் கொடுப்பதற்கு முப்பத்தையாயிரத்துக்குக் குறையப் பேச்சு இல்லையென்று மற்றவர்கள் தீர்

மானமாகக் கூறிவிட்டனர். என் செய்வார் பாபம்! அழுதார்; மயங்கினர்; கைக்கெட்டிய பணம் வாய்க் கெட்டவில்லை யென்று கலங்கினர். என்ன செய்வது? அந்தப் பொல்லாத பணம் தான் வந்தவழிபார்த்து ஓடிப் போவதற்கு ஒற்றைக் கால்மேல் நின்றது. பையனுக்குக் கல்யாணமும் முடிந்தது. பணமிருந்த கடைகளில் பற்று வரவும் நேராயிற்று. அதற்குமேற் பையனுக்கு வேண்டிய செலவு நடைகளுக்கு முன் ஆடிக்குத் தை பத்துமாக்கி ஏழை எளியவர்களை ஏமாற்றிப் பிடுங்கிய காணி பூமிகளும் குடியிருந்த வீடும் அதற்கடுத்த குட்டிச் சுவர்களுங்கூடத் தீர்ந்துவிட்டன. கெட்டியாகப் பிழைத்த செட்டியாரவர்கட்கு என்ன கிடைத்திருக்குமென்பதை நமது வாசகர்களே ஊகித்துக்கொள்ளட்டும். அவர் கதை அப்படியிருக்க இந்த நிகழ்ச்சியின் விசேடத்தை இங்கு கவனிப்போம். சமூகத்தில் கல்யாண காரியம் நேர்மையாகவும் சுலபமாகவுமிருந்தால் நான்கு பெண்களின் வாழ்வு பாழாகுமா? அந்நான்கு பெண்களுக்கும் வாங்கிய ஒரு லட்ச ரூபாய் இருந்தவிடம் தெரியாமற் போகுமா? நான்கு பெண்களை விற்று ஒரு பிள்ளை கூட்டி கல்யாணம் செய்யக்கூடத் திண்டாட்டமாகுமா? எல்லாம் சமூகத்தின் சீர்கேடான பழக்க வழக்கங்களா லுண்டாகும் கஷ்ட நஷ்டங்க ளன்றோ!

இந்த இரண்டு நிகழ்ச்சிகளினும் நேர்ந்த கஷ்ட நஷ்டங்கள் யாவும் அதிகமான பிள்ளைகளைப் பெற்றதனாலும் ஆண்மகவில்லாக் குறையினாலும் நேர்ந்தனவென்று வைத்துக் கொள்வோம். அப்படி யில்லாமல் ஒரே மகனும் போதுமான பொருளும் மற்ற சௌகர்யங்களும் இருந்தும் விவாஹ விஷயத்திலுள்ள சீர்கேட்டினால் நேர்ந்த கஷ்டங்களைப்பற்றிக் கூறுகிறேன்

## மூன்ருங்கதை.

ஒரு குடும்பத்தில் தாய் தந்தையர் தேடி தபசிருந்து நெடுநாட்சென்று பெற்ற ஓரே மகன். வேறு பிள்ளைகளேயில்லை. ஆகவே அருமையாக வளர்த்திருப்பார்களென்று சொல்லவேண்டியதில்லை. அருமையாக வளர்த்த பிள்ளைகள் வாத்தியாரைப் பயமுறுத்திப் படித்த பிள்ளைகளாகவும் அநேகமாக காரியத்துக் குதவாத பிள்ளைகளாகவும் விளையாட்டுப் பிள்ளைகளாகவும் கடைசிவரையி லிருந்துவிடுவது சகஜம். அத்தகைய பிள்ளைகளைத்தான் இக்காலத்தில் (Minors) மைனர்களென்று கூறுகிறார்கள். அதாவது வயது வந்தும் புத்திவராத பிள்ளைகளென்ற காரணம்பற்றிக் கூறுகிறார்கள். அவர்கள் இந்த உலகத்தில் அறிந்திருப்பது மூன்று நான்கு விஷயங்கள்தான். 1. தாசிவீடு, 2. சூதாட்டம், 3. மதுபானம், 4. மோட்டார் கார்ச் சவாரி. இவற்றுடன் சில மைனர்கள், காற்சட்டை மேற்சட்டைகள், ஆட்ஸ், (Hats) பூட்ஸ் (Boots) இவற்றிலும் அதிக பிரமையுடையவர்களாய் விளங்குகின்றனர். எழுதுவதும் எழுதியதைப் படிப்பதும் அவர்கட்குப் பிடிக்காத காரியங்கள். முன்னோர்கள் தேடிவைத்த பொருளை அழிக்கப் பிறந்த அல்லது அப்படிச்செய்ய ஸ்வீகாரமாக வந்தவர்களன்றி அவற்றைப் பாதுகாக்கவாவது அபிவிர்த்தி செய்பவாவது அவர்களுக்குத் தெரியாது. உண்ணுவதும் உறங்குவதுமான குடும்ப காரியங்களைக் கவனிப்பதற்குக்கூட அய்யராவது அய்யங்காராவது அவசியம் வேண்டும். அப்படியொரு காரியஸ்தரில்லாமல் அவர்களால் ஒரு சில நாட்களுக்குக்கூட நிர்வகிக்க முடியாது. வழியும் தெரியாது. ஆனல் நான் மேற்

கூறிய பிள்ளை அப்படியில்லை. அதிகப் படிப்பில்லாவிட்டாலும் தூரதேயங்கட்குப் போய் தொழில் துறையிலீடுபடா விட்டாலும் வீண் காரியம் வீண் செலவு செய்து கெட்டபேர் எடுத்துக்கொள்ளவில்லை. நல்ல பிள்ளையாகவே இருந்தார். இளம்பிராயத்தில் நல்ல இடத்தில் கல்யாணம் செய்யப்பெற்றார். ஒரு பெண் குழந்தை மட்டும் பிறந்திருந்தது. தாய் தந்தையரிருவரும் காலஞ்சென்று விட்டனர். வயது முப்பது ஆயிற்று தந்தையார் தேடி வைத்துவிட்டுப் போன பணம் அறுபதாயிர ரூபாய் ரொக்கமாக இருந்தது. பெண் பெரியவளாகி விட்டாள். நல்ல சம்பந்தம் தேடினர். அப்படியே கிடைத்த தென்றாலும், இருபத்தையாயிர ரூபாய் செலவிட்டுச் செய்யவேண்டியதாயிற்று. மகளுக்குக் கல்யாணம் முடிந்ததும் துரதிஷ்டவசமாக மனைவி நோய்வாய்ப்பட்டு மரணமடைந்தாள். ஆகவே அவர் மறுமணம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்துவிட்டது. மறுமணம் பணமில்லாமல் முடியக் கூடியதாக இல்லை. ஆகவே பாக்கியிருந்த எல்லாப் பணங்களையும் வழித்துத் துடைத்துக் கொடுத்துவிட்டு ஒரு பெண்ணைக்கொண்டார். அந்தப் பெண்ணும் புருஷனுடைய அருமை பெருமை யறியாத இளம்பெண்ணாக இருந்தது. முப்பது வயதுவரை யாதொரு கவலையுமில்லாமல் நிரம்ப சந்தோஷமாக வண்டி வாகனங்களும் ஏவலாட்களும் நல்ல உணவும் நல்ல சௌகரியமாகவு மிருந்தவ ராதலால், வறுமையும் துன்பமும் அவரை வாட்டிவிட்டன. மனம்வருந்தி உடல்மெலிந்து மறுமணம் செய்துகொண்ட சில மாதங்களில் அவரும் நோய்வாய்ப்பட்டு மரணமடைந்து விட்டார். இந்தக்

கதையினுல் நம்மவரின் விவாஹ விஷயம் எவ்வளவு அபாயகரமானதாக இருக்கிறதென்பதும் பெரும் பணம் எவ்வளவு சீக்கிரமாக அழிந்து பாழாகிவிடுகின்றனவென்பதும் அதனுலேற்படும் கவலையும் துன்பமும் அகாலத்தில் மரணப்படுக்கையிற் கிடத்திவிடுகின்றனவென்பதும் நாம் அறிந்துகொள்ளக்கூடிய புத்திமதிகளாக இருக்கின்றன.

அறுபதாயிர ரூபாய் பணமுள்ள ஒருவர் இருபத்தையாயிர ரூபாய் செலவிட்டு ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்யவேண்டிய நிர்ப்பந்த மேற்படுவது நியாயமாகுமா? இல்லாதிருந்தால் நல்ல இடம் நல்ல மாப்பிளை நல்ல சம்பந்தம் அமைவதாக இல்லையாம். ஏதோ கொஞ்சம் முன் பின்னுக இருந்தாலும் குற்றமில்லையென்று செய்துவிடலா மென்ருல் ஒரே பெண்ணைப் பெற்று ஓவியமாகவளர்த்து ஊராரையெல்லாம் பழித்து உத்தண்டமாகத் திரிந்த மனைவி சம்மதிக்கவில்லையாம். தன்னிலைமை யறியாத அவள் பெரிய இடந்தேடிப் பெண்கொடுக்க விரும்புவதும் இதுவரையில் ஒருவரும் வைக்காதமாதிரி சாமான் வைக்கவும் இதுவரை ஒருவரும் செய்யாத மாதிரி கல்யாணம் செய்யவும் ஆர்வங்கொள்வது சகஜமன்ரோ! அது தான் இருபத்தையாயிர ரூபாய்களைச் செலவுசெப்வதற்குக் காரணமாயிற்று. புருஷன் டம்பத்துக்கு ஆசைப்படவில்லை. பெருஞ்செலவு செய்ய விரும்பவில்லை. தன் நிலைமையை உணராமலில்லை. ஆனுல் சமூகத்தின் போக்கும், விபரீதமான பழக்க வழக்கங்களும், மனைவியின் அறியாமையால் உண்டான நிர்ப்பந்தமும் அவரைக் குனியவைத்துவிட்டன. கல்வியறிவில்லாதவர்களும் கிணற்றுத் தவளை

களைப்போல் குறுகிய திருஷ்டியுள்ளவர்களும் மூடநம்பிக்கையுள்ளவர்களுமான பெண்களின் புத்தியும் போக்கும் செயலும் பல சமயங்களில் நல்லனவாக முடிவதில்லை. அதுதான் போகட்டும். அந்த ஆடம்பரப் பிரியமுள்ள மனைவி போய்விட்டாளே, தாரமிழந்த அவர் ஒரு புருஷனை இழந்த பெண்ணை மணந்துகொள்ளக் கூடுமானால் அது எவ்வளவு சுலபமான காரியமாக இருக்கும். அப்படி வழக்கமுள்ள சமூகமாக இருந்தால் அவர் நிச்சயமாக அப்படியே செய்துகொண்டிருப்பார். கையிலுள்ளவை மடியிலுள்ளவையெல்லாம் ஒரு பெண்ணுக்காக அதுவும் அருமையறியாத சிறுபெண்ணுக்காக இழந்து வருந்தமாட்டார். சமூகம் அந்த ஏற்பாட்டையேற்றுக்கொள்ள மறுப்பதால் வீட்டைத் துடைத்துக் கொடுத்துத் தலையை முழுகிவிட்டு ஒரு வழியுமில்லாமல் வெறும் ஆளாக மனம் நொந்து மாண்டுபோனார்! அவர்தான் மாண்டுபோனாரென்றால் அவர் பெயரால் ஒரு இளம் பெண் ஆயுள்பரியந்தம் சிறைத் தண்டனையடைந்து வருந்துவதா? இதுதான் நமது சமூகக்கட்டுப்பாட்டின் சிறப்பு! இதைத்தான் நம்மவர் பல்லைக் கடித்துக்கொண்டு பாதுகாத்து வருகின்றனர்! இதிற்றான்ஜாதி மரியாதைகள் யாவும் புதைந்து கிடக்கின்றனவென்கின்றனர். பெருஞ் சூதுக்களத்திற்கூட இரண்டு ஆட்டத்தில் அறுபதாயிர ரூபாய் நஷ்டம் வராது. திவர்த்திக் கொள்ளைக்காரர்கூட ஒரு வீட்டிலுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் கொண்டுபோவதில்லை. இவ்விரண்டு பெரிய அபாயங்களிலும் பெரிய அபாயமான காரியமாக நம்மவர் விவாஹ விஷயமிருக்கிறது? இம்மூன்றும் பணமிருந்தும் பாடுபட்டவர்களின் கதைகளாகும்.

நான்காவதாக இந்தப் பாழான பழக்க வழக்கங்களை யுடைய சமூகத்திற் படித்திருக்கும் பாடுபட்டவர்களின் கதையைக் கேளுங்கள்.

## நான்காங்கதை.

சாதாரண குடும்பஸ்தர் ஒருவர் நெடுநாள் தூரதேசங்களிலிருந்து சேவகாவிருத்திசெய்தும் அதிக வருவாயில்லாதவராய் பழைய கூரைவீட்டை விட்டு ஒரு சிறு வீடுகட்டிக்கொள்ளவும் தன் குடும்பச் செலவுக்கும் மற்றவர்களைப்போல் உண்டு உடுத்தி வாழவும் கடன்படாமல் ஒவ்வொரு கணக்கிலும் கிடைத்த பொருளை செலவு செய்து மரியாதையாகக் காலங்கழித்துவந்தார். ஆனால் அவர் தம் மக்களுக்காக ஒரு சிறு தொகையும் சேர்த்து வைக்க முடியாதவராகவே இருந்தார். அவருக்கு இரண்டு ஆண் குழந்தைகள் மட்டுமிருந்தனர். அவ்விருவரையும் பர்மாவுக்குக் கொண்டுபோய் அங்கு படிக்க வைத்தார். செட்டியார் பணமில்லாதவராயினும் கொஞ்சம் விவேகமுள்ளவர். தம் மக்களுக்குப் பொருள்தேடி வைக்காவிட்டாலும் நன்றாகப் படிக்கவைத்துவிட்டாற் பிழைத்துக் கொள்ளுவார்களென்று உறுதிகொண்டு பிள்ளைகளின் படிப்பிற் சிரத்தைகொண்டிருந்தார். அவ்வாறே இரண்டு பிள்ளைகளும் தமிழும் ஆங்கிலமும் கற்று புத்திசாலிகளாகவும் யோக்கியர்களாகவும் நல்ல பிள்ளைகளாகவும் ஆயினர். மூத்த மகனுக்கு வயது பத்தொன்பது. இளைய மகனுக்கு வயது பதினைந்து. கல்யாணம் செய்ய வேண்டுமே! பெண்ணுக்குப் பெருந்தொகைகொடுக்க வேண்டுமே!! என்ன செய்வது? கையிற் பணமில்லை. அவ்வளவு பெருந்தொகை கடன் வாங்கிக்

கொடுக்கவும் முடியாது. வேறு வழி ஒன்றுமில்லை. பெருங்கவலை யடைந்தார். இளைய மகனை ஸ்வீகாரஞ் செய்து கொடுத்தாவது மூத்த மகனுக்குக் கல்யாணம் செய்விக்கலாமென்று கருதினார். அவர்கள் கோயிலிற் பிள்ளைகளுக்குப் பெருந்தொகை கொடுத்துக் கூட்டுவாரில்லை. இந்த நிலைமையில் நோயுற்று மரணமடைந்து விட்டார்.

மூத்தமகன் நல்ல புத்திசாலி. பரம யோக்கியன். அடக்கமும் மரியாதையு முள்ளவன். ஆயினும் அவை யெல்லாம் நமது சமூகத்துக்கு வேண்டிய காரியங்களா! அவற்றையொரு பொருட்டாக மதிக்கக்கூடிய சமூகமா? படிப்பையும் அறிவையும் யோக்கியாம்சையையும்பற்றிக் கேட்பவர் யார்? பணமன்றோ வேண்டும்! அந்தப்பா ழான பணத்துக்கன்றோ மதிப்பிருக்கின்றது!! பண முள்ள குடும்பத்தின் பிள்ளைகள் பரம மூடர்களாயிருந்தா லும் ஒன்று மறியாதவர்களாய் எழுதப்படிக்கக் கூட நன் றுயறியாதவர்களாய் சூது, குடி, விபசாரம், அயோக்கி யத்தனம் முதலிய தீய ஒழுக்கங்களை யுடையவர்களாயி ருந்தாலும் பகுத்தறிவில்லாத பழக்க வழக்கங்களைத் தலையணியாகத் தாங்கிநிற்கும் நமது சமூகத்திற் கல்யா ணத்துக்குப் பஞ்சமில்லையன்றோ! பத்து வயதுப் பை யனுக்கு இருபது வயதுப் பெண் வந்துநிற்பாள்! ஒரு இட்டலி தின்னமுடியாத பையனுக்கு ஒன்பது இட்டலி தின்னுகிற பெண் மனைவியாக வருவாள்!! பஸ்கானு ரண்டு உடுத்தத் தெரியாத பையனுக்குப் பதினாறு முழச்சேலை கட்டிய பெண் மனைவியாக வருவாள்!!! ஆனால் சாமான்ய குடும்பங்களின் பிள்ளைகளுக்கு அப்படி வருமா? அவர்களுக்குக் கல்யாணமென்பது ஒரு கண்ட

மல்லவா? அந்தப் பெரிய கண்டத்துக்குத் தப்பினு லன்றோ அவன் தனவணிக சமூகத்தில் ஒரு மனிதனுக முடியும்.

ஆகவே புத்திசாலிகளான இரண்டு பையன்களும் தங்கள் கலியாண விஷயமாக மனச்சோர்வுற்றுப் பல வழிகளையும் எண்ணினார்கள். ஆனால் சமூகம் பழிக்கும் என்ற அச்சங் காரணமாக அவர்கள் வேறு வழிகளிற் செல்ல முடியாதவர்களாய்த் தவித்தனர். இந்த சமூகத்தில் என் பிறந்தோம்? என்று பலகாலும் சிந்தித்து வருத்தமடைந்தனர். இப்போது மூத்த பையனுக்கு வயது இருபத்தைந்து ஆகிவிட்டது. இந்த சமயம் கொஞ்சம் பணமுள்ள ஒருவர் பெண்ணுக்குப் பணமில் லாமலும் சொற்பச் சீதனத்துடனும் கொஞ்சம் நகை களுடனும் தம் பெண்ணை மூத்த பையனுக்குக் கொடுப் பதாகத் தெரிவித்தார். நல்லதுதான். ஆனால் அப் பெண் (ஊமை) வாய்பேசாத பெண்ணாக இருந்தாள். இருந்தாலும் (Valuable) விலையேறப்பெற்ற தனவை சிய சமூகத்திற் பிறந்த பெண் அன்றோ! ஆதலாற் பையன் வேறு வழியின்றி சொல்லவொண்ணுத மன வருத்தத்தோடும் நாணத்தோடும் துக்கத்தோடும் தன் தலைவிதி என்று சமாதானஞ் செய்துகொண்டு அப் பெண்ணை மணந்துகொண்டான். படியாத பெண்கள் நிறைந்த நமது சமூகத்தில் வாய்பேசுகிற பெண்களை மணந்து அவர்களைச் சரிக்கட்டிக்கொண்டு குடும்பவாழ்க் கை நடத்துவதே கரடிக்கூத்தாக இருக்கும்போது வாய் பேசாத பெண்ணை மணந்து அந்தக் கஷ்டத்தை யனுப விப்பது எவ்வளவு சிரமமாக இருக்குமென்பதைச் சொல் லவேண்டுமோ? மூத்த பையன் கல்யாணம் இங்ஙனமாக

இளைய பையன் கல்யாணத்தைப்பற்றிக் கேளுங்கள். பர்மாவில் ஒரு கடைக்கு அடுத்தாளாக இளையவன் நான்கு வருஷம் போயிருந்து நாலாயிர ரூபாயும் மூத்த வன் ஒரு கடைக்கு எஜண்டாக மூன்று வருஷம் போயி ருந்து ஆறாயிர ரூபாயும் சம்பளம்பெற்றுத் திரும்பி வந் தனர். அதில் நடப்புச் செலவுகள் நீக்கி ஏழாயிரம் ரூபாய்தான் மீதமிருந்தது. இளையவனுக்கும் வயது இருபத்தைந்துக்கு மேலாகிவிட்டது. கல்யாணம்செய்ய வேண்டுமே? என்ன செய்வது? வேறு சமூகமாக இருந்தால் அவர்களுடைய அறிவுக்கும் புத்திக்கும் சாமர்த்தியத்திற்கும் கல்யாணம் மட்டுமா! ஏழாயிர ரூபாய் பெரும் மூலதனமாகவும் இருக்கும். அந்த மூல தனத்தைக்கொண்டு அவர்கள் வெகுதூரம் விருத்தி செய்து மிகமிகச் சுகமாக வாழ்ந்திருப்பார்கள். நமது சமூகத்தில் கல்யாணம் என்பது சாமான்ய குடும்பங் கட்கு ஒரு நாசகாரியமாக இருக்கும்போது அப்படி வாழ இடமுண்டா? நமது கல்யாணப் பூதத்துக்கு ஏழாயிர ரூபாய் எம்மாத்திரம்? அது ஒரு ஆமைவடைதானே! ஆகவே அவ்விரு சகோதரர்களும் மனமுடைந்தவர்க ளாய், பெண் கிடைக்காத கவலையே பெருங்கவலையாய் வருந்தி நின்றனர். இந்த நிலைமையில் தாகவிடாய் கொண்டவனுக்குக் கடல் தண்ணீரைக் கொடுத்தது போல் ஒருவர் பெண் கொடுக்க முன்வந்தார். அந்தப் பெண்ணோ பீரங்கி முழக்கமுங்கேளாத பெருஞ்செவிடு. அப்படியிருந்தாலும் கல்யாணச்செலவுக்குப் பணங்கொ டுக்காமல் முடியவில்லை. என் செய்வார் பாபம்! ஏதோ கொடுத்து இளையவன் கல்யாணமும் முடிந்தது. ஏற்க னவே ஊமையின் உபத்திரவம் பெரிதாக இருந்தது.

அழேநாடு பலமான ஒரு செவிடும் சேர்ந்தால் அந்தக் குடும்ப வாழ்க்கையின் அழகையும் குணத்தையும் யாரே வர்ணிக்கக்கூடும்!

இக் கதையில் நாம் ஆராய்ந் தறியவேண்டிய விஷயங்களைப்பற்றிச் சிறிது கூறுகிறேன். படிப்புக்கு மதிப்பு வைக்கும் சமூகமாக இருந்தால் இவ்விரு சகோதரர்கட்கும் கல்யாண விஷயத்திற் சிறிதும் கஷ்டமே ஏற்பட்டிராது. படிப்பிருந்தால் கஷ்டம் நேராது என்ற நம்பிக்கையிருந்தால், நம்மில் எல்லோரும் படிக்கமுந்துவார்கள். அப்படியில்லாமல் பணத்துக்குமட்டும் மதிப்பிருப்பதால் படிப்பிற் கவலையுமில்லை சிரத்தையுமில்லை. கல்வி புறக்கணிக்கப்படுகிற தென்றே சொல்லவேண்டிய திருக்கிறது. அது இருக்கட்டும். நமது பெண்களும் புனர் விவாஹம் செய்து கொள்ளுவதென்ற ஏற்பாடிருந்தால் கல்வியறிவுள்ள இரண்டு சகோதரர்கட்கு அநியாயமாக ஊமையும் செவிடும் வந்து சேருமா? என்னே! சமூகமிருக்கும் நிலைமை!! இனி ஐந்தாவதாக நம்மவர் விவாஹ விஷயத்திலுள்ள சீர்கேட்டினால் உண்டான ஒரு பரிதாபமான சம்பவத்தைப்பற்றிக் கூறுகிறேன்.

## ஐந்தாங்கதை.

ஒரு சாமான்யமான குடும்பத்தில் புருஷனும் மனைவியும் மிகவும் நல்லவர்கள். மிகவும் ஒற்றுமை யுடையவர்கள். சுகதுக்கங்களை வேற்றுமை யில்லாமற் பகிர்ந்தனுபவிப்பவர்கள். புருஷனால் மனைவிக்கும் மனைவியாற் புருஷனுக்கும் சிறிதும் துன்பமேற்படுவதில்லை. செட்டியார் பணக்காரரல்லவாயினும், நல்ல முயற்சியுடையவர். தொடர்ச்சியாகத் தொழிலில் ஈடுபட்டவர்.

சிறு பிராய முதற்கொண்டு கப்பலேறிப் பலதடவை தூரதேசங்கட்குப் போய்வந்தவர். அடுத்தாளாகவும் மேலாளாகவு மிருந்து அனுபவம் பெற்றவர். ஆயினு மென்ன! பணம் சேரவில்லை. சாண் ஏறினால் முழம் சருக்குவது அவருடைய அதிஷ்டமாக இருந்தது. பாடு அதிகமேயன்றி பலன் ஒன்றுமில்லை. வட்டித் தொழி லுக்கு அதிகப்படிப்பு வேண்டியதில்லையென்று சித்தாந் தமாகி யிருக்கிறதென்றாலும் ஹரிச்சுவடியும் எண்சுவடி யுமாவது படித்திருக்கத்தான் வேண்டும். சிலர் அவை களிலும் தேர்ச்சிபெறாதவர்களாய், தம் பெயரைக்கூட சரியாக எழுதத் தெரியாதவர்களாய் எழுதிய கடிதத் தைப் படிக்கத் தெரியாதவர்களாய், கணக்கெழுதும் வழியும் வகையும் தெரியாதவர்களாய் சீட்டுக் கூட்டுக்கு முன்னாற் பற்றெழுதிப் பின்னால் வரவுவைத்து அதையே பேரேடு குறிப்பாக வைத்துக் கொண்டுவிற்று வருபவர் களாய், சிங்களம், பர்மா, மலாய், அன்னும் முதலிய பாஷைகளில் அறுபது பர்செண்ட் வீதம் தமிழைக் கலந்து மணிப்பிரவாள நடையில் அன்னியபாஷை பேசு கிறவர்களாய், அதுவும் தெரியாதவர்களாய்க்கூட இருந்து பணம் சம்பாதித்து விடுகிறார்கள். அதற்கு அவர்களு டைய அதிஷ்டந்தான் காரணமாம். சிலருக்கு நல்ல திறமையும் புத்திசாலித் தனமும் முயற்சியும் சாமர்த்தி யமும் நிறைய இருக்கும்; கடைசி நாள்வரை தரித்திரம் நீங்குவதில்லை; தொட்டதெல்லாம் நஷ்டமாவதும், நல்ல தெல்லாம் கெட்டதாவதும், பொன்னைத் தொட்டாலும் மண்ணாகி விடுவதும், காசைத் தொட்டாலும் கரியாகி விடுவதும் சகஜமாக இருக்கிறது! இதற்கென்ன கார ணம்? துரதிஷ்டந்தான் காரணமாக வேண்டும். நமது

கதாநாயகர் நாநிஷ்டமுள்ள வகுப்பிற் சேர்ந்தவராகவே இருந்தார். இவருக்கு ஒரு பெண்ணும் ஒரு பிள்ளையு மிருந்தனர். இரண்டு பிள்ளைகளையும் நன்றாகப் படிக்க வைத்திருந்தார். பிள்ளையைப் பார்க்கிலும் பெண் நல்ல புத்திசாலி. நல்ல அழகு. நல்ல குணம். நல்ல வசீகரம். சிறு பிராய முதலாக மற்ற பெண்களைப்போல் அசட்டுத் தனமான புத்தியும் செயலும் அவளுக்கில்லை. செல்வர் களல்லவாயினும் தாயும் தந்தையும் பிள்ளைகளை மிகவும் நன்றாக வளர்த்து வந்தனர். பிள்ளைகள் இருவருக்கும் கல்யாண வயது வந்துவிட்டது. தாம் எவ்வளவு கஷ்ட மான நிலைமையிலிருந்தாலும் தம் பெண்ணுக்குப் பணம் வாங்குவதில்லை யென்பது செட்டியாரின் நீண்டநாள் விர தமாக இருந்தது. ஆயினும் பிள்ளைக்குக் கல்யாணமாக வேண்டுமே! என் செய்வது? அவர் பணந்தேடப்பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் பெரிய கஷ்டமாகப் பிள்ளைக ளின் விவாஹ விஷயம் நேர்ந்துவிட்டது. ஒற்றுமை யுள்ள புருஷனும் மனைவியும் ஒருவரை யொருவர் நொந் துகொள்ளாமல் ஒருவரை யொருவர் துன்பப்படுத்தாமல் பலவாறு நினைந்து நினைந்து வருத்தமடைந்தனர். கடை சியாக வேறுவழி யொன்றுமில்லாமல் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் மாறுதலாகச் செய்வதென்ற முடிவுக்கு வந் தார்கள். அதற்காக நல்ல மாப்பிள்ளையும் நல்ல பெண் ணுமுள்ள பல இடங்களையும் கவனித்தார்கள். கவ னித்து என்ன செய்வது? சமூகத்தின் பாழான பழக்க வழக்கங்களால் மாற்றிச் செய்வதற்கும் குறைந்தபக்ஷம் பத்தாயிரம் ரூபாய் வேண்டுமே! இல்லாதவனுக்கு அது பெருந்தொகையன்றோ! செட்டியாரிடம் அந்தச் செல வுக்கும் பணமில்லை. ஆகவே கல்யாணச் செலவுக்கும்

(மேம்) பணம் தந்து மாறுதலாகச் செய்யவேண்டிய இனம் தேடவேண்டியதாக இருந்தது. அப்படிப் பார்க்கும்போது ஒரு இனந்தான் கிடைத்தது. அவர்கள் மாற்றிக் கட்டிக்கொள்ளவும் பத்தாயிர ரூபாய் அதிகமாகத் தரவும் இசைந்தார்கள். ஆனல் அந்த மாப்பிள்ளையையும் பெண்ணேயும்பற்றி என்ன சொல்வது? மாப்பிள்ளை மிகவும் பயங்கரமான உருவத்தை யுடையவன். அவனுடைய சுருட்டை மயிரும் அகன்ற முகமும் கோரப்பற்களும் நீண்ட நாசியும் கறுத்த நிறமும் ஆறடிக்கு மேற்பட்ட உயரமும் கண்டோர் நிடுக்கிடக்கூடியதாக இருந்தன. அவன் தங்கையும் அப்படியே யிருந்தாள். உருவம் ஒருபுறம் இருக்கட்டும். மாப்பிள்ளையின் ஒழுக்கங்களையும் குண விசேடத்தையும் என்னென்று கூறுவது? நல்ல குடியன்! கள்ளு, சாராயம், பிராண்டி முதலியவற்றை தண்ணீரருந்துவதுபோல் நிறையக்குடித்து சில சமயம் சாக்கடைகளிற்கூட வீழ்ந்து கிடப்பான். இரவு பகலாக சூது ஆடுவான்; திருடுவான்; தாசி வீடுகளெல்லாம் அவன் சொந்த வீடுகள்தான். இத்தகைய தீய ஒழுக்கங்களெல்லாம் அவனுடைய சிறு பிராயமுதற்கொண்டே அவனுக்கு சகஜமாகிவிட்டன. ஆனல் அவனைப்பற்றி இத்தனை விசேடமும் எல்லோருக்கும் தெரியாது. சிலருக்குத் தெரிந்திருந்தாலும் கட்டுகிற கொள்ளுகிற பிள்ளைகளைப்பற்றி நம்மவர் தோஷங்கூறுவது வழக்கமில்லை யன்றோ! நமது செட்டியாரின் விசாரணையில் மாப்பிள்ளையின் ஒழுக்கங்களைப்பற்றி ஒன்றும் வெளியாகவில்லை :பாயினும் மாப்பிள்ளை அதிகக் கெட்டிக்காரனில்லை யென்றும், பெருவழுது (அழகில்லாதவன்) தானென்றும் மட்டும் தெரிந்து கொண்டார். ஆயினும்

பெண்ணுக்குப் பெண் தந்து பத்தாயிர ரூபாயும் தரக் கூடிய இனம் வேறு வரவேயில்லே. பல மாதங்கள் தயங்கி மயங்கிப் பார்த்தும் நமது துருப்பிடித்த பழக்க வழக்கங்களினுல் வேறு வழியிற் செல்ல முடியவில்லே. ஆகவே கல்யாணங்களிரண்டும் நல்ல சுபமுகூர்த்தத்தில் முடிந்து விட்டன. கல்யாணம் முடிந்த மறுநாள் முத லாகவே பெண் தன் கணவனேப்பற்றிக் கவலேப்பட ஆரம் பித்து விட்டாள். தனக்கு மணம் முடிந்தபின் கணவ னுடன்கூடி தன் வாழ்க்கையை மிகச் சிறப்பாக நடத்த வேண்டுமென்று அவள் நினைத்திருந்த எண்ணங்களும் போட்டிருந்த திட்டங்களும் பகற்கனவாகி விட்டன. முதலில் தன் கணவனின் பயங்கரமான உருவமும் பிறகு ஒவ்வொன்ருக அவனது தீய ஒழுக்கங்களும், அவளே மனங்கலங்கச் செய்து விட்டன. சொர்ண விக்கிரகம் போலிருந்த அவள் ஒரு சில நாளில் வாடி மெலிந்து ஒரு நோயாளிபோ லாகிவிட்டாள். உண்ணுவதும் உறங்குவதும் அவளுக்கு வெறுப்பாயின. ஆடைகளும் அணிகளும் அவளுக்கு நஞ்சுபோலாகி விட்டன. உற் ருர் உறவினரைக் காணவும் பேசவும் நாணமுற்ருள். "பூமிக்குச் சுமையாக நான் ஏன் அலேந்துகொண்டிருக்க வேண்டு" மென்று பலகாலும் சிந்தித்தாள். நொந்து நொந்து மனமுருகினுள். புருஷன் பலநாள் வீட்டுக்கு வருவதில்லே. சில சமயம் வரும்போது நிறையக்குடித்து வெறித்துத் தலேவிரிகோலமாக வந்து மனேவியை வாயில் வந்தபடி பேசி யேசி மயிரைப்பிடித்து இழுத்து அடித்து உதைத்து மிதித்து திருவிழா நடத்துவான். இந்த அவ மானமும் துன்பமும் பொறுக்க முடியாமல் அந்த உத் தமமான பெண் தன் தாய் தந்தையருக்குத் தன்னேப்பற்

றிக் கவலைப்பட வேண்டாமென்று ஒரு கடிதமெழுதி வைத்துவிட்டு குறுக்கு வழியாக சிவலோகப் பிராப்தி யடைந்துவிட்டாள். இந்தப் பேரிடிபோன்ற துக்கத் தைக்கேட்டு சகித்திருக்க முடியாமல் பிதாவும் அகால மரணமடைந்தார் அதே நோயாகப் படுத்த படுக்கை யிற் கிடந்து அந்த உத்தமமான தாயும் சில நாளில் மர ணமடைந்தாள். இப்படி சமூக வாழ்க்கையின் சீர்கேட் டினால் ஒரு குடும்பம் நாசமாகிவிட்டது நம்மவரின் கல்யாணச் செலவு ஒழுங்கானதாக இருந்தால் இரண்டு கல்யாணத்துக்குப் பத்தாயிரம் வேண்டுமா? பத்தாயிரம் வேண்டியதாக இல்லையானால் இந்த உத்தமியின் வாழ் நாள் இப்படி முடியுமா? பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் வழக்கமிருந்தால் மாறுதலுக்குப் போகாமல் மகனுக்கு அப்படி ஒரு பெண்ணைத் தேடிவைத்துவிட்டு மகளை அவள் அறிவுக்கும் புத்திக்கும் எற்ப ஒரு நல்ல வரன் தேடிக்கொடுத்திருப்பாரன்றோ! என்னே பாழான வழக்கம்! இனி ஆறாவதாக ஒரு அநியாயத்தைக் கேளுங்கள்.

## ஆறுங்கதை.

ஊர் கொஞ்சம் பெரியவூர். அந்த ஊரிற் பணக் காரரென்று ஒருவரிருந்தார். அவருக்குப் பத்து லக்ஷ ரூபாய் பணமிருப்பதாக மதிக்கப்பட்டிருந்தது. அதற் கேற்ற விதமாக ஆடம்பரங்களும் இருந்தன. பணக் காரரென்பவர்களில் இரண்டுவித முண்டு. கடனில்லாத பணக்காரர் ஒருவகை; கடன் வாங்குதற்கு ஒரு எல்லை கூடக் கட்டிக்கொள்ளாத பணக்காரர் ஒரு வகை. கட னில்லாத பணக்காரர் பெரும் பணம் வைத்திருந்தாலும்

சிறு தொகையாக வைத்திருந்தாலும் அவர்கள் பணக்காரர்தான் அதிற் சந்தேகமில்லை. தொழில் முறையிற் சிறிது கடன் வாங்குவதும் கொடுப்பதும் கட்டாயமாக இருந்தாலும் அதற்கும் ஒரு வரம்பு வேண்டும். வரம்பில்லாமல் இயன்றவரையிற் கடன் வாங்கி எட்டின வரையில் கடைகளை வைத்து முடிந்தவரையிற் செலவு செய்து முடியாதபோது வருத்தப்படுவது விவேகமான காரியமன்று. உதாரணமாகப் பத்து லட்ச ரூபாய்ப் பணக்காரர் ஒருவர் எட்டு ஊரிற் கடைகளை வைத்து ஒரு ஊருக்கு காலைந்து லட்சம் தொழிற் செய்வதானல் இருபத்தைந்து முப்பது லட்சம் கடன்படாமல் எப்படி முடியும்? இருபத்தைந்து முப்பது லட்சம் கடனிருக்கும்போது சொந்தமுதல் எப்படி ருஜுவாக இருக்கமுடியும்? எட்டு ஊரிற் கடை நடப்பதையும் நாற்பது லட்ச ரூபாய் வரவு செலவாவதையும் சாசுவதமாக நினைத்துக் கொண்டு ஆடம்பரமாகப் பல செலவுகளையும் செய்ய முற்பட்டு வருஷந்தோறும் லட்ச லட்சமாகத் தருவித்து டம்பச் செலவுகளைச் செய்து கொண்டிருந்தால் எவ்வளவு நாட் காலந்தள்ள முடியும்? தொழில் முறையில் லாபத்தைப்போல் நஷ்டம் வருவதும் சகஜமன்றோ! பணமில்லாத நிலைமையிற் சிறிது கடன்வாங்கிக் கொடுத்துச்செய்தாலும் பணம் வந்த பிறகு கடன்படுவதைக் கூடியவரை நிறுத்திவிடவேண்டும். அப்படி வாங்கினலும் தம்முடைய முதலிற் பாதி அல்லது தம்முடைய முதலின் அளவுக்குமேற் கடன்படுதல் கூடாது. அப்படிச் செய்தால் எக்காலத்தும் கஷ்டத்துக் காளாக நேராது; கடைகளும் அதிகமாதல் கூடாது. (தற்கால நிலைமையைப்போல்) நிரம்ப அசௌகரியமான காலத்

தும் தம் முதலின் அளவு கடன்பட்டவர்களுக்குக் கஷ்டம் வரக்காரணமில்லே. வந்தாலும் பாதிக்கமாட்டாது. நமது செட்டியார் இரண்டாவது வகையைச் சார்ந்த கடன்காரப் பணக்காரராகவேயிருந்தார். அவருக்கு ஒரே பெண் குழந்தை. அப்பெண்ணுக்கு ஒன்பது வயதுதாயிற்று. ஏழு வயது முதற்கொண்டே கல்யாண விஷயத்தில் அப்பெண்ணின் தாயார் துடிதுடித்துக் கொண்டிருந்தாள். தாயார் அந்த ஊருக்கு ஒரு அதிகப் பிரசங்கி. ஆடம்பரத்தில் அதிக விருப்பங் கொண்டவள். பெரிய வாயாடி. எதையும் மதிக்காமற் பேசுபவள். அந்த ஊரில் யார் எந்த விசேடத்தைச் செய்தாலும் எவ்வளவு செலவிட்டுச் செய்தாலும் அதையொரு பொருட்டாக மதியாமற் பேசுவது அவளுடைய சுபாவம். தன் புருஷர் பெருந் தனவந்தரானதற்குத் தானே காரணமென்றும் தான் வாழ்க்கைப்பட்டு வந்த பிறகுதான் எல்லாச் செல்வமும் வந்ததென்றும் அடிக்கடி பெருமை பேசிக் கொண்டிருப்பவள். இத்தகைய சுபாவமுள்ள தாயார் தன் பெண்ணுக்கு இதுவரை கல்யாணம்செய்து கண்ணுற் பாராமலிருந்ததே ஆச்சரியமன்றோ! அந்தப் பெண் பிறந்த நாள் தொடங்கி அதற்காக அவள் சேகரித்து வைத்திருந்த சாமான்களுக்கு ஒரு எல்லேயில்லே. இரண்டு வருஷமாகவே தன் கைவரிசையைக் காட்ட அவள் அவசரப்பட்டுக்கொண்டிருந்தாள். அவள் குறிப்பிட்டிருந்த மாப்பிள்ளே இன்னும் பால்குடி மறக்கவில்லேயாதலால் புருஷன் இணங்காமலிருந்தார். பெண்ணுக்கு வயது ஒன்பதாயிற்று.

மெய்த்தவம் பயின்றுபெற்று வேந்தர்க்கும்
கொடாமல் முக்கண்

அத்தனுக் கென்றுவாளா அரசன்வைத்
　　திருந்த பாவை
மத்தளிகன் பின்போனுள் மகள்தனை
　　அந்தோ ஆண்டு
பத்தின்மேல் வைத்திருத்தல் பாபமென்
　　றிகழ்ந்தார் கண்டோர்.

என்று அவசரப்பட்ட நூலாசிரியர்கள் கூற்றை அறிந்தோ அறியாமலோ இவளும் அவசரப்பட்டாள். மாப்பிள்ளை வீட்டாரும் அந்த ஊரில் ஒரு பெரும் பணக்காரர். மாப்பிள்ளையின் தாயார் ஒரு பேராசைக்காரி. மாப்பிள்ளைக்கு அப்போதுதான் வயது ஏழாயிற்று. சம்பந்திகள் ஒருவரை யொருவர் கலந்து கொண்டார்கள். எல்லாப் பேச்சுக்களும் முடிந்தன, கல்யாணமும் நிச்சயமாயிற்று. எல்லாப் பொருத்தங்களினும் மாங்கல்யப் பொருத்தம் மிகவும் நன்றுகப் பொருந்தி யிருக்கிறதென்று ஒரு நாள் முழுதும் பரிசீலனை செய்து சாஸ்திரியார் தீர்மானமாகக் கூறிவிட்டார். அன்று அவருக்கு ஒரு மூட்டை பருப்பும் ஒரு மூட்டை வெங்காயமும் ஒரு மூட்டை மிளகாய்ப் பொடியும் சன்மானம் செய்யப்பட்டன. முகூர்த்த நாளும் நிச்சயமாயிற்று. பெண்ணின் தாயார் இங்கொரு காலும் அங்கொருகாலுமாக சாமான் வைக்க ஆரம்பித்து விட்டாள். வெள்ளி அடுக்கு இருபத்தொன்று. வெண்கல அடுக்கு நூற்றிருபத்தொன்று. அம்மி அறுபத்தொன்று. அகப்பை ஆயிரத்தொன்று. மங்குப் பாத்திரப்பெட்டி பத்து. மரவைப் பெட்டி பதினென்று. பச்சரிசி மூட்டை அறுபது. பலசரக்குக் கடை ஒன்று. குப்பைத் தொட்டி ஒன்று. கூட்டு மாறு தூற்றி ஒன்று. இப்படி வைத்து மாப்பிள்ளை

வீட்டின் இரண்டாங்கட்டு, மூன்றுங்கட்டு, முதற்கட்டு, முகப்பு எல்லாம் நிரப்பி ஒரு கண்காட்சி (Exhibition) சாலையாக்கிவிட்டாள். யானை குதிரை முதலிய எடுபிடிகளெல்லாம் வந்து குவிந்துவிட்டன. பெண்ணின் தாயாரும் மாப்பிள்ளையின் தாயாரும் போட்டி போட்டுப் புதுப்புது மாதிரியாக உடுத்திக் காட்டினர். எல்லாம் சிறப்பாக நடந்தன. சல்யாணமும் முடிந்தது. எல்லாக் கணக்குகளையும் செட்டியார் எழுதிப்பார்த்தபோது ஒரு லட்ச ரூபாய் செலவாயிற்று. ஊராரைப் பழித்த உத்தண்டக்காரி ஒரு லட்ச ரூபாயை ஊதிப்பறக்கச் செய்துவிட்டாள். இந்தவிதமாகக் கல்யாணம் முடிந்தது. அப்போது அடுத்த கிராமங்களில் எற்கனவே கொஞ்சம் வைசூரி பரவியிருந்தது. கல்யாணத் திருவிழா பெரிய திருவிழாவாக இருந்ததனால் யானை, குதிரை முதலிய அலங்காரங்களையும் ஊர்வலம் முதலிய வேடிக்கைகளையும் வாணக் காட்சியையும் காணும்பொருட்டு பக்கத்தூர் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்து போய்க் கொண்டிருந்தனர். ஆதலின் அந்தத் தொத்து நோய் அந்த ஊரிலும் கொஞ்சம் தலைகாட்டிற்று. கல்யாணம் முடிந்து ஒருவாரந்தான். மாப்பிள்ளைப் பையனுக்குக் கொஞ்சம் காய்ச்சலடித்தது. மூன்றும் நாள் ஆறு மூக்குப்போல் அம்மை தோன்றிற்று. பிறகு எள்ளிடக்கூட இடமில்லாமல் நிறைந்து விட்டது. எல்லோரும் திடுக்கிட்டுப் போயினர். எத்தனையோ பிரார்த்தனைகள் செய்து கொள்ளப்பட்டன. ஆயிரமாயிரமாக ஆடு கோழிகள் பிரார்த்தனை செய்து கொள்ளப்பட்டன. ஒரு டசன் பேரிருந்து மாரியம்மன் தாலாட்டுப் படித்தனர். என்ன பயன்? இரண்டு வாரமவரை பிள்ளை படாத

பாடுபட்டு மரணமடைந்து விட்டான்:

மணமகனே பிணமகனாய் மணப்பறையே
பிணப் பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலி
யாய்க் கழிய
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின்
வரும் பயனை
உணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க்
கொன்று மிலை.

என்றபடி கல்யாணவீடு பெருந் துக்க வீடாக மாறிவிட்டது. பாபம்! ஒன்றுமறியாத அந்த இளம் பெண்ணின் களங்கமற்ற முகத்தைப் பார்த்துப் பார்த்து,

கையோ செழுங்கமலம் முகமோ நிறைந்தமதி
காலோ இளஞ்சினை வரால்
மெய்யோ கலாபமயில் இடையோ நுடங்குகொடி
விழியோ கடைந்த வடிவேல்
மையோ சுருண்ட குழல்...........
வனிதைக் கெனப் புகலுவார்
ஐயோ! இவட்குவிதி சிறையோ வெனக்கதறி
யழுவார் அறைந்து விழுவார்.

இப்படி அழவேண்டிய நாள்வரை யழுதுவிட்டுப் பந்தற் போட்டு தாலியையும் வாங்கி விட்டனர். யாதொரு விமோசனமுமில்லையென்று தீர்ந்துவிட்டது. இதுதான் பாழான ஜாதி வழக்கம். இந்தப் பெண்ணுக்கு மறுமணம் செய்ய என்னதடை? என்ன ஆக்ஷேபம்? இந்த ஒரு பாபத்தையுமறியாத ஒன்பது வயதுப் பெண் துருப்பிடித்துப்போன ஜாதி வழக்கத்துக்காக ஆயுள்பரியந்தம் சிறைத்தண்டனை அனுபவிப்பதா? இதைப் பார்க்கிலும்

அக்கிரமமும் அநியாயமும் என்ன வேண்டும்? இன்னும் ஒரு அக்கிரமத்தைக் கேளுங்கள்.

## ஏழாங்கதை.

தொழில் செய்வதிற் சற்று திறமையுள்ள கெட்டிக்காரர் ஒருவ ரிருந்தார். உலகத்தில் கெட்டிக்காரர்கள் என்பவரில் இரண்டுவிதமுண்டு. பகுத்தறிவில்லாமற் பணம் தேடுகிறமட்டிற் கெட்டிக்காரர் ஒருவகை. பணந் தேடுவதோடு பகுத்தறிவுமுள்ள கெட்டிக்காரர் ஒருவகை. பகுத்தறி வில்லாமற் பணந் தேடுகிற கெட்டிக்காரர் களுக்கு வயது நூறுனாலுஞ்சரி அதற்கு மேலானாலுஞ் சரி. ஆசையும், ஆத்திரமும், லோபமும், கோபமும், மோகமும், வஞ்சகமும், பொறாமையும், துவேஷமும் மாறுவதே யில்லை. அநித்தியமான இந்த வாழ்க்கை யையே சதமென்று நம்பி அதில் மயங்கிக்கிடந்து ஒரு சிறிதும் ஞானோதய மில்லாதவர்களாய் பணத்தையே தெய்வமெனக் கொண்டு வழிபட்டுக்கிடந்து ஏக்கமுற்றுத் தூக்கமற்றவர்களாய்ப் பிறந்தபடியேயிருந்து இருந்தபடியே வாழ்ந்து வாழ்ந்தபடியே மடிந்து பாழாகின்றனர். பணம் தேடுவதோடு பகுத்தறிவுமுள்ள கெட்டிக்காரர்கள் தங்களுடைய பருவங்கட்குத் தக்கபடி ஆடிப்பாடி உண்டுடுத்தி சந்தோஷமாக வாழ்ந்து காலம் செல்லச் செல்ல மனித வாழ்க்கையின் பலாபலனைப் பகுத்துணர்ந்து இளமை செல்வம் யாக்கை முதலியவற்றின் அநித்தியத் தன்மையை யுணர்ந்து வயது முதிர முதிரக் கொஞ்சம் கொஞ்சமாக ஆசைகளை யொழித்துத் தம் பொறுப்புகளைத் தம் மக்கட்கு விட்டுச் சாந்தியடைந்து (அறுபதாவது வயதில்) நிம்மதியாக காமக் குரோத

லோபம் முதலிய தீய எண்ணங்களை மறந்து நிர்மலமான மனதோடு பரிசுத்தமான விஷயங்களைக் கேட்டுணர்ந்து ஒரு துறவியைப்போற் காலங்கழித்துவிட்டு மன அமைதியோடு சரீரத்தை விட்டுவிடுவர். இவைதாம் இரண்டு விதமான கெட்டிக்காரர்கட்கும் வித்தியாசங்களாம்.

நமது கதாநாயகர் முதல் வகுப்பைச் சேர்ந்த கெட்டிக்காரர். சிறு பிராய முதற்கொண்டு தூரதேயங்களிற் போயிருந்து தொழில் முறையில் அனுபவம் பெற்றவர். நல்ல வயதில் நல்ல கடை ஒன்றுக்கு எஜன்டாக அமர்ந்தார். அப்போது தொழில் அனுகூலமாக இருந்து அதிகமான இலாபம் வரப்பெற்றமையால் முதலாளியின் அபிமானத்தைப் பெரிதும் பெற்றுவிட்டார். முதலாளி ஒரு தனவந்தர். அவருக்கு இவர் முதன் மந்திரி (Prime Minister) யாகி விட்டார். ஆயினும் தம்மட்டில் அமைதி யில்லாதவராகவும் ஆடம்பரப் பிரியராகவும் வீண் கூட்டமும் வீண் காரியங்களும் வீண் செலவும் செய்து தன்னை யெப்படி யெப்படியோ பெரிதாக ஊரார் நினைத்துக்கொள்ள வேண்டுமென்ற பைத்தியம் பிடித்தவர். இவருக்கு சிறு பிராயத்திற் கல்யாணம் முடிந்திருந்தது. ஆனால் அந்தப் பெண் இவருடைய தடபுடலுக்கு ஏற்றவ ளல்ல. மேன் மினுக்கி யல்ல. பட்டு ரவிக்கையும் புட்டாமாவும் அணிந்து கொள்பவ ளல்ல. சேலை தோய்க்கவும் மிளகாய் அரைக்கவும் தண்ணீரெடுக்கவும் சமையல் செய்யவும் வேலையாள் வைத்துக்கொள்பவ ளல்ல. அதிகப் பேச்சுக்காரியல்ல. வீச்சுக்காரியல்ல. அரிச்சந்திர நாடகம் பார்ப்பதற்குச் சந்திரமதி வேஷம்போட்டுக் கிளம்புபவளல்ல. வாசனைத் திரவியங்களைப்பற்றி அவளுக்கு ஒன்றும் தெரியாது.

நான மென்பது மணங்கமழ் பொருளது
நாவிலுண்பது வோசொல்
ஊனுணங்குவோய் மடந்தைய ரணிவதாம்
உயர் தலை முலைக்கோட்டில்
ஆன தங்கது பூசினுல் வீங்கின தமையுமோ
வெனக் கேட்ட

கான வேட்டுவரின் தன்மையைப் பெற்றவள். சாதாரணமான ஒரு குடித்தனக்காரி. அடக்கமும் மரியாதையும் நல்லொழுக்கமு முடையவள். ஆகவே அப் பெண்ணின் நடைகளும் உடைகளும் குண விசேடங்களும் மானம் மரியாதைகளும் நமது கதாநாயகரான தடபுடல் ஆசாமிக்குப் பிடிக்கவில்லை. கையிற் கொஞ்சம் பணமும் முதலாளியின் ஆதரவும் இருந்தன. ஆதலால் சிச்சி இந்த அசடு நம்முடைய கௌரவத்துக்கும் அந்தஸ்துக்கும் பொருத்தமுள்ள தல்லவென்று கருதி அவளைத் தள்ளிவிட்டு மறுமணம் செய்துகொள்ள முயன்ருர். அந்த விருப்பத்தைத் தன் முதலாளிக்கும் தெரிவித்தார். அவரும் அனுமதி கொடுத்தார். பெண் தேடினுர்கள். சிவந்த மேனியும் நிமிர்ந்த நடையும் சிரித்த வாயும் பொரித்த பேச்சுமுள்ள ஒரு மினுக்குப் பெண்ணகப்பட்டாள். அவள்தான் தனக்குச் சரியான ஜோடியென்று அகமகிழ்ந்தார். முப்பதாயிர ரூபாய் கொடுத்து அந்த அழகை வாங்கினுர். கல்யாணம் முடிந்தது. அந்த அழகை அழகு செய்வதற்குப் பத்தாயிர ரூபாய்க்கு வைர நகைகள் செய்து அலங்கரித்தாயிற்று. அதன் மேல் (Lady and Gentleman) இருவரும் சவாரிசெய்ய வேண்டுமே! ஒரு மோட்டார்கார் ரூபாய் ஐயாயிரத்துக்கு வாங்கியாயிற்று. ஐந்தாறுபேர் வேலைக்

காரர்கள். இவ்விதமாக ஆடம்பரங்கள் அதிகமாயின. அதுவரையில் தேடிய பணத்துக்கும் அம்மட்டில் அழிவு வந்துவிட்டது. பழைய கணக்காளுக்கும் வருஷம் மூன்ருகிவிட்டது. செட்டியார் புறப்பட்டுப் போய்விட்டார். போய்ச்சேர்ந்து சில மாதங்களாகு முன்னரே தம்பி ரண்டாவது மனைவியாரைப்பற்றிப் பலவிதமான விசேட சமாசாரங்கள் வர ஆரம்பித்து விட்டன. "இருமுகிற கிழவியைவிட்டுக் கனைக்கிற கிழவியை வாங்கியதுபோல்" புதிய மனைவியின் சமாச்சாரங்கள் வந்துகொண்டிருந்தன. ஆயினும் மனைவியின்பால்வைத்த அன்பினுல் பொறுமை மேற்கொண்டிருந்தார். பின்னும் பின்னும் தொடர்ச்சியாகவும் விகாரமாகவும் (Complaint) பிராதுகள் வந்து கொண்டிருந்தன. வருஷமும் இரண்டாயிற்று. கணக்கு முடியவில்லை. ஆயினும் முதலாளியின் அனுமதிபெற்று ஊர் வந்து சேர்ந்தார். விசாரித்தார். எல்லாம் வெளிச்சமாயிற்று. சீச்சி இந்த (Rascal) போக்கிரி உதவாது. இன்னென்று பார்க்கிறேன் என்று சபதமிட்டார். முதலாளிக்குத் தகவல் கொடுத்தார். அவரும் உடனே அனுமதியும் கொடுத்துப் பணத்துக்கும் ஆர்டர் கொடுத்தார். மூன்ருவது பெண் தேடினுர்கள். அதற்கும் ஒன்று கிடைத்தது. ஐம்பதாயிர ரூபாய் செலவாயிற்று. மூன்ருவது திருக்கல்யாணமும் முடிந்தது. திரும்பிப் போனுர். ஆறு மாதமாயிற்று. பதிலாள் வரும் சமயமாயிற்று. ஊர் (தொழிலும் வியாபாரமும்) வீழ்ந்து விட்டது. பெருங்கடன் வாங்கிப் பெருந் தொழிற்செய்திருந்தபடியால் அகப்பட்டுக்கொண்டார்.

"ஏன் அப்படிச் செய்தாய்?" என்ருர் முதலாளி.

"எப்போதும்போற் செய்தே"னென்ருர் கூட்டாளி.

நஷ்டத்துக்குக் காரணம் கேட்டார் முதலாளி.

"நாடுகளெல்லாம் வீழ்ந்தன" வென்றார் கூட்டாளி.

"அப்படிச் செய்தது தப்பிதம்" என்றார் முதலாளி.

"யாரென் செய்வது அதிர்ஷ்ட" மென்றார் கூட்டாளி.

இவ்விதமாக முதலாளியும் கூட்டாளியும் போராடி எட்டுப்பாக்கி எழுபதாயிரம் நஷ்டத்துக்கு (Damage) நாற்பதாயிரம் வரவேண்டுமென்று (Suit) வியாஜ்யம் தொடரப் பெற்றார். எட்டுப்பாக்கி எழுபதாயிரத்துக்கு (Decree) டிக்கிரியாயிற்று. முதன் மந்திரி மீது உடன் ஜப்தியும் வாரண்டும் பிறந்துவிட்டன. ஆடினார், ஓடினார், பணம் அகப்படவில்லை. எல்லாவற்றையு மிழந்து (Insolvent) இன்சால்வெண்டாகி எங்கேயோ அடங்கி விட்டார்.

வாசகர்களே! இந்த நிகழ்ச்சியை ஆராய்ந்து பாருங்கள். ஆடம்பரம் எவ்வளவு அனர்த்தத்தில் வந்து முடிந்ததென்பதைக் காண்பீர்கள்! அது ஒருபுறமிருக்கட்டும். ஒரு புருஷன் ஒன்றன் பின் ஒன்றாகப் பல மணங்களை அக்கிரமமாகச் செய்துகொள்வதை அங்கீகரிக்கும் சமூகம் ஒரு பெண் தன் புருஷனை இழந்தபின் நியாயமாக மறுமணம் செய்து கொள்ளுவதை என் அங்கீகரிப்பதில்லை? இது என்ன தர்மம்? இது என்ன வழக்கம்? இந்த அர்த்தமில்லாத வழக்கத்தை என் மாற்றக் கூடாது? இதுதான் நமது சமூகத்துக்கு இப்போது முக்கியமான விஷயமாக இருக்கிறது.

இதுவரையில் எழு கதைகள் எழு மாதிரியில் எடுத்துக் கூறினேன். இன்னும் எண்ணற்ற நிகழ்ச்சிகள் எடுத்துக் கூறக்கிடக்கின்றன வாயினும் கதைகள் இம்

மட்டிற் போதுமென நினைக்கிறேன். இனி எனது அபிமானமுள்ள இளைஞர்கள் அனுட்டிக்க வேண்டிய சில விதிவிலக்குகளை எடுத்துக் கூறுகிறேன். நம்மவரின் விவாக விஷயம் எவ்வளவு சீர்கேடுற்றுக் கிடக்கிறதென் பதையும் அதனாலேற்படும் கஷ்ட நஷ்டங்கள் எவ்வளவு பெரிதாகவும் ஆபத்தாகவும் இருக்கின்றன வென்பதையும் அறிந்தீர்கள். இன்னும் கல்யாணத்தைப்பற்றி மனத்தினாலும் நினைக்கமுடியாத குடும்பங்கள் பல இருக்கின்றன. அவற்றைப்பற்றி ஒன்றும் சொல்லுவதற்கில்லை. அவர்கட்கு இப்போதுள்ள நிலைமையில் யாதொரு கதிமோக்ஷமுமில்லை. ஆகவே நாம் செய்யவேண்டிய காரியம் என்ன?

## பெண்ணுக்குப் பணம் வாங்குதல்.

நம்மவர் விவாக விஷயத்தில் பெண்ணுக்குப் பணம் வாங்குத லென்னும் கெட்டவழக்கம் ஒழியவேண்டும். எல்லோருக்கும் சுலபமாகக் கல்யாணம் நடக்கவேண்டும். ஆனால் பெண்ணுக்குப் பணம் வாங்குதல் ஒரு கெட்ட வழக்கமென்பதையும் அது ஒழிய வேண்டு மென்பதையும் நம்மில் எல்லோரும் அங்கீகரிக்கின்றனர். பெண்ணுக்குப் பணம் வாங்குகிறவர்களுங்கூட அங்கீகரிக்கின்றனர். அப்படியானால் என் ஒழியவில்லை? அதற்கு இப்போதுள்ள நிலைமைதான் இடந்தரவில்லை. அனாவசியமாக விவாக விஷயத்தில் எற்படும் வீண் செலவுகளும் சீர்வரிசைகளும் ஆடையாபரணங்களும் அடக்கப்படாமற் போய்விட்டன. மயிலைக்கண்டு வான்கோழி ஆடுவது போல் பணக்காரரையும் அவர்கள் சும்மா (பெண்ணுக்கு சீர்வரிசை கொடுத்து) செய்கிற கல்யாணத்தை

யும் பார்த்துச் சாமான்ய ஜனங்களும் ஏராளமான சாமான் களை வாங்கிவைத்து ஆடிப்பாடி அதிகச் செலவுசெய்கி ருர்கள். அப்படிச் செலவிடாமற் கல்யாணஞ் செய்ய முடியாதென்றுங் கருதுகிருர்கள். ஆகவே பெண்ணுக் குப் பணம் வாங்கக்கூடாதென்ருல் அதற்குமுன் கல்யா ணச் செலவுகள் அடங்குவதற்கு வழிதேடவேண்டும். சாதாரணமாக ஒரு பெண் கல்யாணத்துக்கு ஐயாயிர ரூபாய்க்குக் குறைய இப்போது செலவு செய்யமுடி யாது. அதற்குமேலும் தொடர்ச்சியாகச் சீர்முறை கொடுத்து வரவேண்டும். கையிற் பணமில்லாதவர்கள் இந்த விதிக்கு என்ன செய்வார்கள்? வாங்க ஆரம்பிக் கிருர்கள்.

அப்போது ஒரு காதறுந்தாலும் இரண்டு காது களு மறுந்தாலும் மூளி மூளிதானென்று கொஞ்சம் கொஞ்சம் சேர்த்துச் சேர்த்துப் பழைய கடன் புதுக் கடன்கள் தீரவும் அரைகுறையான வேலைகளை முடிக்க வும் ரிப்பேர் செய்யவும் இன்னும் பல பின் தேவைகளை யும் கணக்கிட்டு அந்தப் பெண் தலையில் வைத்துப் பெருந் தொகை கேட்கிருர்கள். மாப்பிள்ளை வேறு வகையின்றி இரத்தத்தையும் பிழிந்து கேட்டபடி கொ டுத்துக் கொள்ளுகிருர்கள். இந்தக் கேசில் யார்மீது குற்றமென்று நம்மாற் சொல்ல முடியவில்லை. பெண் ணுக்குப் பணம் வாங்குகிறவர்கள் மீது குற்றமா? அவர் கள் என்ன செய்வார்கள்? ஏற்கனவே கையிற் பணமில் லாதவராகவோ அல்லது தொழில் வியாபாரம் செய்து நஷ்டமடைந்தவர்களாகவோ அல்லது சூது விபசாரம் முதலிய தீய செய்கைகளால் பொருளை யிழந்தவர்களா கவோ வறுமையடைந்து கடன்பட்டுக் கஷ்டமடைந்து

கொண்டிருக்கிறார்கள். அப்படி யிருக்கும்போது அவர்களைச் சீர்வரிசை கொடுத்துப் பெண்ணைச் சும்மா செய்யவில்லையென்று முறைகூறுவதும், திட்டுவதும், தூஷிப்பதும் நியாயமாகுமா? கடைத் தேங்காயை யெடுத்து வழிப்பிள்ளையாருக் குடைப்பது சுலபமாகத்தா னிருக்கும். அவர்கள் நிலையிலிருந்து யோஜித்துப் பார்த்தால் அந்த கிரமம் எப்படியிருக்கிற தென்பது தெரியும். ஆனால் தேவைக்கதிமாக வாங்குகிறார்களே என்றால் வாங்குகிற வழக்கமிருப்பதால் அதை நம்பிச் சிலர் சோம்பேறிகளாகவும் இருந்து விடுகின்றனர். ஆகவே அதற்கு மூலமாக இருக்கிற காரணத்தைக் கண்டு பரிகாரஞ் செய்தாலன்றி அந்த நோய் தீராது. இனி மாப்பிள்ளை வீட்டாரை யேன் கொடுத்துக் கொள்ளுகிறீர்களென்று குற்றங்கூறலாமா? அவர்கள் "சத்தியமாக நாங்கள் கொடுத்துக்கொள்ள ஆசைப்படவில்லை; சும்மா பெண் கிடைக்கும்படி நீங்கள் செய்யவேண்டும்; உங்களுக்குக் கோடி கோடி புண்ணியமுண்டு." என்று சுருக்கமான பாதையில் வந்து விடுவார்கள். ஆகவே பெண்ணுக்குப் பணம் வாங்குவதற்கும் கொடுப்பதற்கும் சமூகமிருக்கும் சீர்கேடான நிலைமையே காரணமன்றி அவர்கள்மீது குற்றமில்லை.

## சாமான் வைத்தல்.

இசை குடிமானத்தை மேற்பாடமாகக் கருதுகிறார்களேயன்றி அதிற்கூறுகிற சீர்வரிசைகள் ஒரு காலத்தில் நம்மவர் கட்டுப்பாடாகச் செய்துவந்த முறையென்று நம்புகிறார்களில்லை. அந்த முறைப்படி இப்போது செய்தாற் பெண்ணுக்குப் பணம் வாங்க வேண்

டிய அவசியமே யிராது. பல்லைக் கடித்துக்கொண்டு பழைய வழக்கங்களைப் பாதுகாக்க விரும்புகிறவர்கள் ஏன் அப்படிச் செய்வதில்லை யென்று கேட்கிறேன். வெள்ளி, வெண்கலம், இரும்பு, மங்கு, மரம், ஜாடி, மூடி, பாய், தடுக்கு, மெத்தை, தலையணை இன்னும் என்னென்னவோ குப்பைகளை யெல்லாம் கூட்டிச்சேர்த்து சாமான் வைக்கிறார்களே. இது அவசியந்தானா? அப்படி வைக்கப்படுகிற சாமான்களை இதுவரையில் யாராவது விற்று முதலாக்கிய துண்டா? இறந்துபோனவர்களின் சாமான்களெல்லாம் எங்கே போய்விட்டன? அவற்றை வைத்துக்கொண்டு அவர்களின் சந்ததியார் உபயோகிக்கக் கூடாதா? மாறி மாறிப் புதிது புதிதாக வாங்கிக் கட்டுகிறார்களே. இது விவேகமான காரியமா? கல்யாணமென்றால் அதன் முதல் அங்கம் சாமான் வைத்தலென்ற வழக்கமிருக்கும்வரை பெண்ணுக்குப் பணம் வாங்குதல் எப்படி ஒழியும்?

அலர்மேலு என்பவள் ஒரு பணக்காரப் பாட்டி. அவளுக்கு மூன்று பென் மக்கள் இருந்தனர். தனக்குப் பிறகு தன்னுடைய மூன்று மக்களும் சரியாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்து ஒவ்வொரு பாத்திரமும் ஒவ்வொரு பண்டமும் ஒரே மாதிரியாக மூன்று உருப்படிகள் வாங்கினாள். வங்காளம் அண்டா என்றால் அதில் ஒரே இடை ஒரே மாதிரியில் மூன்று. கும்பகோணம் அடுக்கென்றால் அதில் ஒரே இடை ஒரே மாதிரியில் மூன்றடுக்கு. கடைத்தெரு அடுக்கென்றால் அதில் ஒரே இடை ஒரே மாதிரியில் மூன்றடுக்கு. காது வைத்த அண்டாவென்றால் அதில் ஒரே மாதிரி ஒரே இடையில் மூன்று. மூளி அண்டாவென்றாலும் அதிலும் மூன்று.

இப்படிச் சேகரித்திருந்தாள். அவை அப்படியிருக்க, மூன்று மக்களுக்கும் கல்யாணம் செய்யும்போது ஏராளமான பாத்திர பண்டங்கள் வாங்கி வழக்கம்போல் வைத்துச் செய்திருந்தாள். மூன்று மக்களில் ஒருத்தி இறந்து போனுள். ஒருத்தி புருஷனையிழந்து தாய்வீடு சேர்ந்து விட்டாள். அவ்விருவருக்கும் சந்ததிகளில்லை. மூத்த மகள் கன்னம்மைக்குத்தான் இரண்டு ஆண் குழந்தைகளும் கல்யாணி யென்று ஒரு பெண்ணுமிருந்தனர். அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்தார்கள். அங்கும் நாத்தனுள் இல்லை. அலர்மேலுப் பாட்டி சேகரித்து வைத்த மூன்று பங்குச் சாமான்களும் சிறிய தாய்மார்களிருவரின் தனிச் சாமான்களும் தன் தாயின் சாமான்களும் தன் மாமி வீட்டுச் சாமான்களும் ஆக எழு வகை சாமான்கள் பாத்திரங்கள் பண்டங்கள் எல்லாம் அவளுக்கு வரவிருக்கின்றன. அவை சுமார் நாற்பது அல்லது நாற்பத்திரண்டு வண்டிப் பாரமிருக்கலாம். அப்படியிருக்க கன்னம்மை மகள் கல்யாணிக்குப் புதுச்சாமான்கள் வாங்கிவைத்துக் கல்யாணம் செய்வதென்றுல் என்ன கொடுமை! இப்படியே ஒவ்வொரு குடும்பத்தின் காரியமுமிருக்கிறது. கல்யாணத்துக்குப் பழைய சாமான்கள் உதவாதாம். பத்து வீட்டுச் சாமான்கள் ஒரு பெண்ணுக்கு வருவதானுலும் அந்தக் கல்யாணத்துக்கு வைப்பது புதுச் சாமான்களே. இதைவிட அர்த்தமில்லாததும் வீணுனதுமான காரியம் இந்த ஐந்து கண்டங்களிலும் காணமுடியாது. இதுவரையில் இருந்து இறந்து போன புள்ளிகளும் இப்போ திருக்கிற புள்ளிகளும் தனித்தனி ஒரு பெருந் தொகை மதிப்புள்ள சாமான்களை வைத்துக் கொண்டிருக்கும்போது இன்னமும் வரு

கிற புள்ளிகளுக்குச் சாமான் வாங்கிக் குவிப்பதென்றால் அதன் முடிவென்ன? ஆகவே இந்தப் பைத்தியம் ஒழிய வேண்டும். இப்போது நமது சமூகத்துள் மூன்றுகோடி ரூபாய்கட்குக குறையாத பித்தளைப் பாத்திரங்கள் வேலையற்றுப்போய் அறைவீடுகளில் அடைக்கப்பட்டுக் கிடக்கின்றன வென்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அதேபோல் எனைய மங்கு மாவை ஜாடி மூடி பாத்திரங்கள் கூட்டங்கள் வேறு மூன்று கோடி ரூபாய்களை மென்று தின்றுவிட்டுப் பாய் தலையணைகூட இல்லாமற் படுத்துறங்குகின்றன வென்பதையும் மறந்துவிடக்கூடாது. கல்யாண வீட்டில் பெண்ணுக்கு வைக்கிற சாமான்களை யெல்லாம் எந்தக் காரணத்தைக்கொண்டும் பெண் வீட்டார் திருப்பி எடுத்துக்கொள்வதில்லை யென்றும் மாப்பிள்ளைக்கே சொந்தமான தென்றும் வழக்கமிருந்திருந்தால் சாமான் வைக்கிற வேலை இவ்வளவு பெரிதாகி யிராது. பெண்ணுக்குப் பணம் வாங்கிக் கொண்டு செய்கிற கல்யாணத்திலுங்கூட அப்பெண் இறந்துபோனால் சாமானகளைத் திருப்பி யெடுத்துக் கொள்ளுகிற வழக்க : மிகவும் அக்கிரமமான வழக்கமன்றோ! அவன் (மாப்பிள்ளை) பணத்தையு மிழந்து மனைவியையும் இழந்து அதோடு ஸ்ரீதனம் சீராட்டு வைத்த சாமான்களையும் பறிகொடுப்ப தென்றால் எவ்வளவு பரிதாபமான காரியம்! இதிப்படியாக, கல்யாண வீட்டில் பட்டு கண்டாங்கி வைக்கிறார்களே அதையும் சற்று கவனிப்போம். ஒரு பெண்ணுக்கு சேலை ரவிக்கைகள் தினுசுக் கொன்றாக முப்பத்தொன்று முதல் நூற்றி ஒன்றுவரை வைக்கப்படுகின்றன. அவை பட்டு நூல் அல்லது பருத்தி நூலாற் செய்யப்பட்டவைகளே

யன்றி செப்புத்தகடு அல்லது இரும்புத் தகடுகளாற் செய்யப்பட்டனவல்ல. ஆகவே இரண்டு மூன்று வருஷங்களுக்குமேல் அவை க்ஷீணமடைய ஆரம்பித்து விடுகின்றனவென்பது ஒரு புறமிருக்கட்டும். இந்த வருஷம வந்த மாதிரிக்கு நல்ல மாதிரியாக அடுத்த வருஷம் வந்துவிடுகின்றன. புதிதாக வந்த சேலையைப் பார்த்துவிட்டுப் பழைய உருப்படியைப் பார்த்தால் மனத்துக்குப் பிடிக்காத மாமியாளைப் பார்த்தமாதிரி யிருக்கும் அப்போது புதிதாக வந்த உருப்படிகளில் நான்கு, ஆறு, பத்து என்று வாங்குகிறார்கள். அடுத்த வருஷம் வேறு கலர், வேறு வங்கி, வேறு டிஸைனுகள் வந்துவிடுகின்றன. அதில் நான்கு பத்து வாங்கப்படுகின்றன. இப்படி வாங்கி வாங்கி அடுக்கி விடுகிறார்கள். ஏற்கனவே கல்யாண வீட்டில் வைத்தவை உடுத்தி முடியாமலிருக்கின்றன. எப்படி உடுத்தி முடியும்? ஒரு பெண் மூன்று மாதங்கட்கு ஒன்றாக உடுத்தி வேணுமென்றே கிழித்தெறிந்தாலும் பன்னிரண்டு வருஷங்கட்கு நாற்பத்தெட்டு உருப்படிகளைத்தானே உடுத்திக் கிழிக்கமுடியும். அதற்குமேலிருப்பனவைகளை யென்னசெய்கிறது? இந்த வகையில் எவ்வளவு பணம் வீணாகின்றன! இதைப்பற்றி யாராவது சிந்திக்கிறார்களா? கல்யாண வீட்டில் நாலாறு மட்டும் வைத்துப் பிறகு வருஷந்தோறும் புதிதுபுதிதாக இரண்டு நாலு வாங்கிக்கொண்டா லென்ன? இப்படி அனுவசியமாகக் கல்யாணச் செலவு செய்துகொண்டிருக்கும்வரை பெண்ணுக்குப் பணம வாங்குவது எப்படி ஒழியும்? கல்யாணங்கள் எப்படிச் சுலபமாக நடக்கும்? இந்தக் கல்யாணப் பாதை மிகவும் சீர்கேடான பாதை யென்பதிற் சந்தேகமுண்டா? ஆகவே ஒரு பெண் கல்

யாணத்துக்குக் கண்டாங்கி பட்டு நாலாறு வைத்துக் கொடுப்பதோடு நடப்பில் உபயோகிக்கப் போதியதான கட்டில், மெத்தை தலையணை, சில வெள்ளி, வெண்கலச் சாமான்கள் ஆகியவைகளை மட்டும் கொடுத்து மற்றபடி கல்யாணத்துக்குச் சாமான் வைப்பதை அடியொடு நிறுத்திவிட வேண்டும். அப்படியானால் விசேடங்கட்கு என்ன செப்வது என்று கேட்கலாம். விசேடங்களிற் பெரிய வீட்டுச் (தாய் தகப்பன் வைத்திருக்கும்) சாமான்களை எல்லாப் பிள்ளைகளும் எடுத்து உபயோகித்துக் கொள்ளும்படி செய்யவேண்டும். அதாவது ஒருவருக்குப் பத்துப் பிள்ளைகளிருந்தாலும் ஒரு பிள்ளை வீட்டில் கல்யாணம் புதுமை நடக்கும்போது மற்றொரு பிள்ளை வீட்டில் நடப்பதில்லை. ஆதலால் ஒவ்வொரு பிள்ளையும் பெரிய வீட்டுச் சாமான்களை யெடுத்து உபயோகித்துக்கொள்வதில் தடையேற்படாது. பத்து மருமக்களும் பத்து (Set) செட்டு வைத்துக் கொள்ளாமல் பொதுவாக ஒரு செட்டு இருந்தாற் போதும். பிறகு பத்துப் பிள்ளைகளும் தனித் தனியே பிரியும்போது தேவையிருந்தால் (நூறு வருஷங்கட் கிடையில் தேவை இருக்காது.) வேண்டியதை வாங்கி ஒரு பொதுக்குடும் பத்துக்கு ஒரு செட்டு வைத்துக்கொள்ளலாம். இப்படிச் செய்வதற்கு சாமான்ய ஜனங்கள் உடன்பட்டாலும் பணக்காரர் உடன்படுவார்களா? அவர்கள் தங்கள் பெண்ணுக்கு அதிகமாகக் கொடுக்க நினைத்தால் ரொக்கமாகக் கொடுத்துவிடக்கூடாதா? பணத்தை வைத்துக்கொண்டால் வேண்டியவற்றை வேண்டிய போது வாங்கக் கிடைக்காதா?

## பின்முறை

இது இப்படியாக, கல்யாணத்தைத் தொடர்ந்து பேரன் பேத்தி பிறக்கும்வரையிலும் அதற்குமேலும் தொடர்ச்சியாக ஆடி வேவு, கார்த்திகை வேவு, பொங்கல் வேவு, பிள்ளையார் நோன்பு வேவு, சித்திரை வேவு, வைகாசி வேவு, தீர்த்தம் சாப்பிட்ட வேவு, பிள்ளைபிறந்த வேவு, புதுமை வேவு என்று எண்ண முடியாத வேவு எழுத முடியாத வேவுகள் ஒன்றன் பின்னொன்றாக வந்து கொண்டேயிருக்கும். அதற்கிடையிற் பழம் தேங்காய் வேறு, தேங்காய் பழம் வேறு வந்துவிடும். இத்தகைய பின் முறைகளுக்கு இரண்டாயிரம் ரூபாய் முதல் ஐயாயிரமும் அதற்கதிகமாகவும் செலவு செல்லும். பணமுள்ளவர்கட்கு (பணமிருக்கும்போது) சுலபமாக இருக்கலாம். இல்லாதவர்கள் இதற்கென்ன செய்வது? அவர்களைப் பெண்ணுக்குப் பணம் வாங்கவேண்டாமென்றால் இந்தச் செலவுக்கு யார் கொடுப்பார்கள்? நகரப்பொதுவில் எதாவது (Fund) மூலதன மிருக்கிறதா? ஆகவே பணக்காரராயினும்சரி பணமில்லாதவர்களாயினும்சரி பின்முறை கொடுக்கும் வழக்கம் அடியோடு ஒழியவேண்டும். மகளும் மாப்பிள்ளையும் வந்தால் அவர்களுக்கு நல்ல உணவளித்து உபசரித்து அனுப்பிவைக்க வேண்டியதைத் தவிர ஒரு ரூபாய்கூடக் கையிற்கொடுத்தனுப்பக் கூடாது. பணமுள்ளவர்கள் தம் மக்களுக்குக் கொடுக்க மனமுள்ளவர்கள் விசேட காலங்களை உபயோகிக்காமல் இலட்ச லட்சமாகக் கொடுக்கட்டும். அதை மற்றவர்கள் பின்பற்ற வேண்டிய அவசியமிராது.

## விசேட நாட்கள்.

இப்போது கல்யாணம் புதுமை முதலிய விசேடங்கட்கு ஆறு நாளும் பெண்ணழைத்த வீட்டில் மூன்று நாளும் கூடியிருந்து வருகிறோம் இது மிகவும் அதிகம். இதனால் வீட்டுக்காரருக்கும் சுகமில்லை. விருந்தினருக்கும் சுகமில்லை. மேலும் நாகரீகமான இக்காலத்தில் ஒரு மனிதன் யாதொரு வேலையுமில்லாமல் ஆறு நாள் இருபத்துநான்கு வேளை இலைமாற்றி யிலைபோட்டுக் கையலம்பிக்கொண்டிருப்பது வெட்கமில்லையா? இக்காலத்துப் பிள்ளைகளும் பெண்களும் மிகமிகச் சுத்தமான ஆகாரங்களையே விரும்புகின்றனர் கல்யாணம் புதுமை முதலிய விசேடங்களிற் சுத்தமான ஆகாரத்தை நினைத்துக்கொண்டால் உபவாசமிருக்க வேண்டியதைத் தவிர வேறு வழியிராது. சமையற் செட்டு (ஒரு ஆபாசமான கூட்டம்) இல்லாமல் இக்காலத்தில் ஒரு விசேடம் நடக்க முடியாது. அந்தக் கூட்டம் அசுத்தமாக இல்லாமல் எப்படி இருக்கமுடியும்? இயற்கையாகவே அவர்களின் உடை உணவு சுத்தமாக இருப்பதில்லை. அதோடு சமையற் செட்டிற் புகுந்து அடுப்படியிலிருந்து பலநாட்கள்வரை இரவு பகலாக மாறுமற் சமையல் செய்வதும் பரிமாறுவதும் வெந்நீர் வைப்பதும் தண்ணீரெடுப்பதுமாக இருந்தால் எப்படி அவர்கள் அசுத்தமில்லாமலிருக்கமுடியும்? பத்து மணிவரை பல் விளக்காமலும் உள்ள நாள்வரை உடைமாற்றுமலும் ஒரு வாரம்வரை உடம்பை நனைக்காமலும் இருந்தால் அவர்கள் செய்யும் உணவின் தன்மையைப்பற்றிக் கூறவேண்டுமா? ஆகவே அவர்களையும் சிரமப்படுத்தாமல் நாமும் சிரமமடையா

மல் பணமும் பண்டங்களும் வீணுக அழியாமற் செய்ய வேண்டுமானுல் விசேட நாட்களைக் குறைக்கவேண்டும். கல்யாணத்துக்கு மூன்று நாட்களும் ஏனைய விசேடங் கட்கு ஒவ்வொரு நாளும் போதுமானது. அப்படிச் செய்தால் அனுவசியமாக உண்பது பாதி, குப்பையிற் கொட்டுவது பாதியாகப் போகாமலும் விசேடச் செலவு கள் ஆயிரக்கணக்காக ஆகாமலும் நூற்றுக் கணக்கில் நின்றுவிடும். சுப விசேடங்கள் இப்படியாக, துக்கவீடு களைப்பற்றிக் கவனிப்போம். அது பதினாறு நாள் உத் ஸவமாக இருக்கிறது. அறுபத்துநான்கு வேளை விருந்து நடக்கிறது. என்ன அநியாயம் பாருங்கள்! ஒருவர் இறந்துபோனால் உற்றார் உறவினர் வந்து துக்கப் விசா ரித்துத் தேறுதல் சொல்லிப் போகவேண்டியது அவசி யந்தான். ஆனால் பதினாறு நாளிருக்க வேண்டுமா? அதற்காக இரண்டாயிரம் மூவாயிரம் செலவாக வேண் டுமா? இதெல்லாம் என்ன வழக்கம்? கையிற் பண மில்லாதவர்கள் என்ன செய்வது? கடன்படவேண்டும். கடனை யெப்படித் தீர்ப்பது? பெண்ணிருந்தால் பெண் ணுக்குப் பணம் வாங்கவேண்டும். பிள்ளை யிருந்தால் ஸ்வீகாரம் விட்டு ஆகவேண்டும். வேறு வழியுண்டா?

## ஆடம்பரங்கள்.

கல்யாண முதலிய விசேட காலங்களில் ஆடம் பரங்களுக்கு ஆசைப்பட்டு அதற்காகப் பெருஞ் செலவு செய்கிறார்கள். பரமலோபிகளுங்கூட அதிற் பின்வாங் குவதில்லை. ஆகவே அந்தப் பைத்தியமும் ஒழியவேண் டும் யானை குதிரை எடுபிடிகளெல்லாம் மனித சமூகத் துக்கு வேண்டியவைதானு? ஊர்வலம், இரதத்தில்

எழுந்தருளல், வாணக்காட்சி, மத்தாப்பு வெளிச்சம் முதலிய அலங்காரங்களெல்லாம் மனித சமூகத்துக்கு வேண்டியவைதானு? இதென்ன பைத்தியம்! பொட்டுக்காரன் பூச்சுக்காரன் வேலைகளை யெல்லாம் நாமே செய்து கொள்ளப்படாதா? அதிற் சிரமமொன்று மில்லையே! மங்கல வாத்தியமாக நாகஸ்வரம் ஒன்றுமட்டும் போதாதா? பயங்கரமான, திடுக்கிடக்கூடிய மேல்நாட்டு யுத்த பேரிகைகள் எதற்காக? கதை கச்சேரிகள் கேட்கத் தக்கனவாயினும் அதன் விலை மதிப்பு நூறு ரூபாய்கட்கு அதிகமாதல் கூடாது. அதுவும் ஒரு கதை அல்லது ஒரு கச்சேரிதா னிருக்கவேண்டும். விசேடங்களிற் பணமெழுதுவதையும் சட்டி பெட்டி பாக்கு பணம் கொடுப்பதுகளையும் நிறுத்திவிட வேண்டும். இப்படி ஆடம்பரங்களை யெல்லாம் ஒழித்துவிட்டு அடக்கமாகவும், நீண்டு நடைபெறக்கூடிய மாதிரியிற் செட்டாகவும், எக்காலமும் ஒரே தன்மையாகவும், எல்லோரும் செய்வார்களா?

## முடிவுரை.

இந்தவிதமாக இப்போதுள்ள பழக்க வழக்கங்கட்கு மூக்குச்சரடு போட்டு இழுத்துப் பிடித்துத் திருத்துவதானுல் சமூகநிலையை ஒருவாறு சீர்ப்படுத்தக்கூடும். இந்தக் கட்டுப்பாடுகட்கு சாமான்ய ஜனங்கள் வறுமையினுல் கஷ்டத்தை யுணர்ந்து இணங்கினுலும் கையிற் பணமுள்ளவர்கள் கட்டுப்பட்டு நடப்பார்களா? நடப்பார்களென்று நான் நினைக்கவில்லை. அதற்காகச்செய்த முயற்சிகளும் கூடிய கூட்டங்களும் எப்படி வீணுயினவென்பதை யாவரும் அறிந்திருக்கிருர்கள். பணக்கா

ரர் கட்டுப்பட்டு நடந்துகாட்டாவிட்டால் தங்கள் நிலை யை யுணர்ந்து தாங்கள் வேறுமாதிரியாக நடந்துகொள் ளக் கூடியவர்களாக நமது சாமான்ய ஜனங்களிருக்க வில்லை. அந்தப் பள்ளிக்கூடம் இன்னும் நம் நாட்டில் ஏற்படவில்லை. தெய்வானுகூலத்தால் அப்படியே எல் லோரும் ஒற்றுமையாக இருந்து நடந்துகொள்ளுவதா கவே வைத்துக் கொள்ளுவோம். அப்போதும் விவாக சம்பந்தமான இரண்டு பெருங் குறைகள் தீராமலிருக் கின்றன. பத்தாயிர ரூபாய்க்குக் குறைந்த ஐவேஜ் உள்ளவர்கட்கும், புருஷனை யிழந்த பெண்களுக்கும் கதிமோட்ச மில்லாம லிருக்கிறது. அவர்களுடைய நிலைமை மிகவும் பரிதபிக்கத் தக்கதாக இருக்கிறது. புருஷனை யிழந்த பெண்கள் மறுமணம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் பணமுள்ளவர்கட்கும் சாமான்ய ஜனங்கட்கும் பொதுவான தர்மமாக இருக்கிறது. ஆக வே மாதர் மறுமணத்தை நமது சமூகம் கையாளுமா னால் புருஷனை யிழந்த பெண்களுக்குக் கதிமோட்ச முண்டாவதோடு ஆயிர ரூபாய் ஐவேஜ் உள்ளவர்கட்கும் தங்குதடை யில்லாமற் கல்யாணம் முடியும். ஆனால் பெண்கள் மறுமணம் செய்துகொள்ளுவதிற் சில சங்க டங்களும் சிக்கலான சில விஷயங்களும் இருக்கின்றன வென்பதை மற்றவர்களைப் பார்க்கிலும் நான் அதிகமாக உணர்ந்திருக்கிறேன். பல வருஷங்களாக நடுநிலையோடு சிந்தித் திருக்கிறேன். ஆயினும் அதனாலேற்படும் நன் மைகளைப் பார்க்கினும் தீமைகள் மிகமிகக் குறைவாகவே இருக்கின்றன. ஆனால் புருஷனை யிழந்த பெண்கள் யாவரும் மறுமணம் செய்துகொண்டுதா னாகவேண்டு மென்பதில்லை. அப்படி ஒரு ஏற்பாடு உலகத்தில் எங்

குமில்லை. விருப்பமுள்ளவர்கள் மட்டும் தடையில்லாமற் செய்துகொள்ள அனுமதித்தாற் போதும். அம்மட்டில் விவாக சம்பந்தமான எல்லாத் துன்பங்களும் தனித்தனியே விடை பெற்றுக்கொள்ளு மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. சமூகம் பலவாறு சிதறுண்டு போகாமற் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமானாற் கொஞ்சமும் தயங்காமல் மாதர் மறுமண விஷயம் கையாளப் படவேண்டும்.

பெண்களும் மறுமணஞ் செய்துகொள்ளும் எற்பாடிருந்தால்,

(1) அவசரப்பட்டுத் தம் மக்கட்குச் சிறுவயதிற் கல்யாணம் செய்து விடுவதாற்கூடக் குற்றமில்லை.

(2) பணக்காரரைச் செலவு விஷயத்திற் கட்டுப் படுத்தவேண்டாம்.

(3) பெண்ணுக்குப் பணம் கொடுக்கவேண்டாமென்று பிரசாரஞ் செய்யவேண்டாம்.

(4) ஆயுட்காலமெல்லாம் தூரதேயங்களிலிருந்து பணந் தேடிக்கொண்டிருக்க வேண்டாம்.

(5) எல்லாச் செலவு நடைகளும் தானேகுறைந்து ஒழுங்குக்கு வந்துவிடும்.

(6) சிறு பெண்கள் வாழ்விழந்து வருந்தியழ அதனைப் பார்த்துச் சுற்றத்தார் அழவேண்டிய அவசியமிராது.

ஆதலால் நம்மவர் விவாக விஷயத்திலுள்ள கஷ்டங்களையும் நஷ்டங்களையும் துன்பங்களையும் துயரங்களை

யும் பழிபாவங்களையும் ஒரேயடியாகப் போக்குவதற்குப் புருஷர்களைப்போற் பெண்களிலும் இஷ்டமுள்ளவர்கள் தடையில்லாமல் மறுமணஞ் செய்துகொண்டு வாழ்வது தான் நேரான வழி.



